"IT IS OUR DUTY TO WORK MOST OF OUR LIVES AND WORK WELL.'

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End.'*

ஸத்தியம் வத—SPEAK THE TRUTH.

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."

EDUCATIONAL AND SOCIAL




அன்பேயவன் : அறுவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum*

'New Series" ஸத்தியமே ஜெயம்—SATYAMEVA JAYATE. "Approved"

புத்தகம். 23.] ராக்ஷஸஹு வைகாசிமீ, 1915ஹு மேமீ [சஞ்சிகை 2.

# THE PROBLEM OF CHILD EDUCATION.

"BENDING THE EDUCATIONAL SYSTEMS."

The Viceroy: "I am not here to decry any efforts that are made to secure for youug men in their early days such qualifications as are necessary if they are to get a good start in life, though I do think it is one of the most difficult problems before India to-day so to adjust, the general life of the country that suitable careers may be open to the multitude of young men who are anually turned out to find no occupation appropriate to their aspirations and qualifications, and so to bend its educational systems that the education given may be that best calculated to fit them for their various careers. This is a problem that besets us in England as well as in India. I do not know how far the difficulties of the problem have forced themselves upon your notice, but I believe......,and I know that the other question of the character and well-being of your students occupies a most prominent place in your attention .....*The inculcation of ideals of social service* has been your practice for years and from all I can hear your labours have been attended with happiest results."—*Lord Hardinge's Speech at St. John's College, Agra.*

**The Economic Value of Education.**

"The imagination must be the child's. He must first of all see clearly. Then out of the whole world of metophors and comparisons he may choose what he likes."-*Madame Montessori*.

"What we need is a greater efficiency on the part of every one, a higher appreciation of the value of labour in all directions, and this can only come by beginning very young by making children do something well and learning to do other things better all the time. Our wasted energy is enormous ...If the Montessori or any other method can reach to the essential fact that it is our duty to work most of our lives and work well, it will be a great boon."—*The London Times.*

# THE NEW EDUCATIONAL MINISTER'S VIEWS ON THE PROBLEM OF CHILD-EDUCATION.

## புதிய வித்யாமந்திரியின் அபிப்பிராயம்.

### THE INFLUENCE OF EDUCATION.

The first need of the village is education suited to its needs. "The teacher in ancient days moulded the life of the boy, and imparted to him the education needed for him. The village schools now scarcely exercise any influence on village life. The school is not in harmony with the needs of the village. The curriculam of studies is the same for all the castes and classes in the Presidency, for towns and villages, irrespective of the needs of the student. The teacher is town-bred. The official Director of educational studies has his eye not on the requirements of any village but on the Madras Presidency as a whole. The courses of study prescribed are really formulated for the use of town boys and are calculated to draw the boys away from villages. The studies are literary and do not make the village boys better farmers or agriculturists. To the girls, such a course of studies is thoroughly unsuited. We want the entire curriculum to be modified to suit the needs of a particular village. Interest may diverge with each village or community, and the children are brought up in the environment peculiar to their village and community. All this can only be done by the members of the village community itself. They have to meet and discuss the needs of their village, and the purposes to be attained by attendance at schools. An official Inspector trying to find out what they want and carrying out the wishes so ascertained can never be a sufficient substitute. A school under village supervision will interest and attract both women and men. We know now that when schools are started in villages in which teachers known to them teach subjects like music, the women flock to them. That the officials may sometimes be white men need make no difference. A school under the management of the members of a village community, teaching the subjects required by them, will also introduce a new element of interest in the village community. They will take a pride in this school, which will be a meeting place for them.—The Hon'ble Mr. Justice C. Sankaran Nair in the *Modern Review*.

"The basis of village life must be a proper system of education devised to suit the needs of the village."

கிராமத்தார் இப்பொழுது வேண்டுவதெல்லாம் உண்மையான வித்யாப்பியாஸம். இது எட்டுப்படிப்பு மாத்திரம் ஆகாது. எத்தொழிலில் எத்துறையில் இறங்கியுழைத்து ஜீவனம் செய்யவேண்டியிருந்தாலும் சரி, மனம் படிந்து, தேஹமும் படிந்து நடக்கப் பழகலாம் பாக்கியம் வேண்டும். விவேகம் மட்டும் சிந்தை நிறைந்திருந்தால் விவேகசிந்தாமணியாகிய வரப்பிரஸாதத்தால் எல்லா பாக்கியமும் பெற்று வாழலாம். விவேக சூந்யமான வித்தை அவித்தையே தானாகும். ஆகையால் அவிவேகத்தைப் போக்கி விவேகத்தைக் கொடுக்கும் வித்தை வேண்டும். இது கிராமத்தார் தாமே செய்யு முயற்சியால் ஸித்திக்க வேண்டுமே யன்றி அவர்களுக்காகப் பிறர் செய்யும் முயற்சியால் ஸித்திக்காது. "கட்டிக்கொடுத்த சோறும் சொல்லிக்கொடுத்த வார்த்தையும் எத்தனை நாளைக்கிருந்துதவும்?" என்பது கிராமத்தார் சொல்லும் பழமொழி. "யோக்யன் தானே பாக்கியனாவான்" என்றால் "அது வேதாந்தம் கூடாது" என்கிற வித்யா விற்பன்னர்களு மிருக்கிறார்கள். அவர்களால் கிராமத்தாருக்கு இடையூறு விளைக்கலாகுமே யன்றி அனுகூலம் செய்வது கூடாமையாக விருக்கிறது. சாதகத்துக்கிடமின்றி பாதத்துக் கிடந்தரும் ஏற்பாடு எக்காலத்தும் வில்லங்கம் விளைக்குமேயன்றி ஸமஷ்டிவாழ்க்கைக்கு நல்லங்கமாகாது. இதை உண்மையாளர்கள் உள்ளபடி ஆய்ந்தோய்ந் துணரல் வேண்டும்.

இதற்கு இன்றியமையாத சாதகம் என்னவென்றால் கிராமவாசத்தின் உண்மைநிலை யுணரல் வேண்டும். இந்த உண்மை யுணர்வது இலகுவான காரியமில்லை. ஸமஷ்டி வித்தையில் பழகினவர்கள் தானே உண்மை யுணர்ந்து ஓதவல்லவராவார். இப்படிப்பட்டவர்கள் நம்மவர்களாக விருந்து நம்மை யறிந்திருக்கவேண்டும்.

புஸ்தகம்-23.] "The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide." [சஞ்சிகை-2.

ராக்ஷஸஹு சித்திரைமீ } விவேக சிந்தாமணி { May June 1915.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததேன்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## THE NEW MINISTER OF EDUCATION.

### புதிய வித்யா மந்திரி.

சென்ற சஞ்சிகையில் அரசர்பிரதிநிதிசட்ட நிரூபண சபையில் வித்யா மந்திரி ஸர் ஹார்கோர்ட் புட்லர் அவர்கள் ஸ்வபாஷாபிவிர்த்தியைப் பற்றித் தாய்பாஷையில் சிறுவர்க்குப் போதிப்பதின் பிரயோசனத்தை யெடுத்துக் கூறியதை யிங்கு விவரித்தெழுதி யிருந்தோம். இப்பொழுது ஸர் ஹார்கோர்ட் புட்லர் அவர்களுக்கு பதிலாக அவருடைய ஸ்தானத்தில் சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜாயிருக்கும் ஸர் ஸங்கரன் நாயர் அவர்கள் வித்யா இலாகா மந்திரியாக நியமிக்கப்பெற்றிருக்கிறார். இந்த நியமனம் மாக்ஷிமைதங்கிய நம் அரசர் அவர்களால் அங்கீகாரம் பெற்று கெஜட்டில்பிரசுரமாய்விட்டது. எல்லாரும் ஸர் சங்கரன் நாயர் அவர்களுக்கு உயர்ந்த பதவி கிடைத்ததென்று அவருக்குச் சந்தோஷமுகமன் கூறுகிறார்கள். நாமும் அவருக்கு இந்தியா முழுமைக்கும் வித்யா மந்திரியாயிருக்கும் பதவி கிடைத்ததைப்பற்றிச் சந்தோஷப்படுகிறோம். ஸர் சங்கரன் நாயர் அவர்களிடம் ஆளுக்குத் தக்கபடி வேஷம்போடுகிற ஸ்வபாவம் இல்லை. "எண்ணித் துணிவது கர்மம்" என்றுள்ளபடி ஒரு காரியத்தில் பிரவேசித்தால் துணிந்து ஆராய்ந்து யோசித்து நிதானம் தப்பாமல் ஒருவித முடிவுகொண்டு அதன்பின் அந்த அபிப்பிராயத்தை நழுவவிடாமல் துணிகரமாய் அதை நிறைவேற்றும் வழிபார்க்கிற ஸ்வபாவம் இவரிடத்தில் இயல்பாயுண்டு. "வாத்தியார் சொன்னபடி தர்ப்பயாமி" என்கிற கதையாக நாலுபேர் அதிகாரிகள் சொன்னபடி சரியென்று தலையாட்டுகிற ஸ்வபாவம் இவரிடத்தில் கிடையாது. தனக்குச்சரியென்று தோன்றியதை வெளியிடப்பயப்படாது தைரியமாகத்தானே சரியென்று தோன்றினபடி நடந்து கொள்ளும் திறமை வாய்ந்தவர். ஒவ்வொரு சமயம் பின்வாங்க நேரிடினும் சமயோசிதமறிந்து சாதிக்கும் வல்லமை யவருக்குண்டு. இவர் பொதுஜனமதிப்பைத் திரணமாய் நினைத்து உத்தியோகப் பெருமையில் மிதமிஞ்சியுழல்கிறவரன்று. தன் அந்தஸ்துக்குள்ள மதிப்பை யறிந்து அதற்குக் குறைவு வராமல் நடந்து கொள்ளும் ஸ்வபாவமுடையவர். இவருக்கு 1912-ம் வருஷம் நைட் பட்டம் கிடைத்தபொழுது இப்பத்திரிகையின் ஆசிரியர் இவருக்குச் சந்தோஷமுகமன் கூறியெழுத அதற்கு பதில் கூறியெழுதியது அவர் குணத்தைக்காட்டுவதாயிருப்பது பற்றி அதைக்கீழே பிரசுரிக்கிறோம்.

"Many thanks for your letter of congratulations. It is gratifying to learn that a publicist like you entertain such a good opinion. I trust I may not fall in your estimation."

"சந்தோஷமுகமன் கூறியெழுதிய கடிதத்துக்காக அநேகவந்தனம். பொதுவிஷயங்களிலுழைக்கும் உம்மைப்போன்றவர் அவ்வளவு நல்லபிப்பிராயம் கொண்டிருப்பதை யறிய மனம் பூரிக்கிறது. அந்த மதிப்பை யிழந்துவிடாதிருப்பேனென்று நம்புகிறேன்."

1906-ம் வருஷம் அர்பத்நட் கம்பெனி முழுகியபொழுது இவருடன் நெருங்கிப் பழகும்படியான சந்தர்ப்பம் கிடைத்தது.\........

மிஸ்டர் சங்கரன்நாயர் அடுத்தவருஷம் அட்வோகேட் ஜெனரலாக நியமிக்கப்பெற்று அதிலிருந்து ஹைகோர்ட்டு ஜட்ஜியாக வந்தார்.

இடையிடையே இவர் மனத்துணிவால் உத்தியோகபதவியில் முன்னுக்குவரும் சந்தர்ப்பங்கள் பலவற்றையிழக்க நேரிட்டிருப்பினும் இவருடைய தீரத்துக்குக் குறைவுவராமல் தானே நடந்து கொண்டு வந்திருக்கிறார்.

இவர் பிரதமவித்யா போதனையைப் பற்றி தீரத்தெளிய நினைந்து கிராமத்தார்க் கவசியமான படிப்பு இன்னபடி யிருக்கவேண்டுமென்று நன்றாகத் தெரிவித்தெழுதி யிருக்கிறார். இவருடைய அபிப்பிராயத்தை யெடுத்தாண்டு "கிராமத்தார்க்கின்றியமையாத நாட்டுப்படிப்பு" இன்னவித மிருக்கவேண்டுமென்று சென்ற வருஷம் பிப்வரிமாசத்துச் சஞ்சிகையில் விஸ்தாரமாயெழுதி யிருக்கிறோம். அதில் இவர் வெகுதாராளமாகத் தமது அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிறார். இப்படிப்பட்ட அபிப்பிராயமுள்ளவர் அந்த அபிப்பிராயத்தை நிறைவேற்றுவதற்கான சாதக சாதன சந்தர்ப்பங்களை யளிக்கும் வித்யாமந்திரி பதவிக்கு வந்ததைப்பற்றி நாம்மிகவும் சந்தோஷப்பட்டு, இவருடைய மந்திரித்துவம் நடக்கும் ஐந்து வருஷகாலத்தில் இவர் செய்யக்கூடிய சீர்திருத்தங்களை ஆவலோ டெதிர்ப்பார்த்ருக்கிறோம்.

சென்ற வருஷாரம்பத்தில் கனம் நமது அரசர் பிரதிநிதியாம் லார்ட் ஹார்டிஞ்சவர்கள் பாலபோத விஷயமாய் வெளியிட்ட அபிப்பிராயத்தையும் அவருடைய புதிய வித்யா மந்திரியாகிய ஸர் ஸங்கரன் நாயர் அவர்கள் அதே காலத்தில் கிராமத்தார்க்கேற்ற படிப்பு எப்படியிருக்கவேண்டுமென்று வெளியிட்ட அபிப்பிராயத்தையும் இங்கிலீஷில் எடுத்து இச் சஞ்சிகையின் முகட்டில் அச்சிட்டிருக்கிறோம். இங்கிலீஷ் தெரியாதவர்கள் புதிய வித்யா மந்திரியின் அபிப்பிராயம் இன்னதென்று தெரிந்துகொள்ள அவர் அபிப்பிராயத்தை யொட்டி முன்னர் விவேகசிந்தாமணியில் வெளிவந்த விஷயத்தில் ஒரு பாகத்தையும் எடுத்ததன் பக்கலில்தானே அச்சிட்டிருக்கிறோம்.

## Srimati Swarna Kumari Devi.
## (Mrs. Ghosal.)
## 'பாரதி' பத்திராசிரியர்
## ஸ்ரீமதி ஸ்வர்ணகுமாரி தேவி.

"When I took up the sacred task of editing, I did not persuade myself to do so with a view to results; nor did I calculate its profit and loss. It was the pleasure of work which encouraged and inspired me to action. Those days of inspiration and encouragement are now ended and I feel lonely and helpless. My done-up body and mind now earnestly seek cessation."
—Srimati Swarna Kumari Devi's touching words of adieu on her retirement from the editorship of '*Bharati*.'

ஸ்ரீமதி ஸ்வர்ணகுமாரி தேவியின் பேர் இந்தியா முழுவதும் பரவிப் பிரஸித்திபெற்றது. முக்கியமாய் வங்காளத்தில் அவர் பெருங்கீர்த்தியும் மிகப்பிரபலமாய்விளங்கிவருகிறது. அந்த அம்மாள் காங்ரேஸ் சபையை ஸ்தாபித்த மிஸ்டர் ஏ. ஓ. ஹியூம் அவர்களுக்கு வலதுகையாயிருந்துதவி அவருக்குப் பின் ஜெனரல் செக்ரிடெரி வேலையைவஹித்து அச்சபையைச் சிறப்பாய் நடத்திவந்த மிஸ்டர் கோஸால் அவர்களின் மனைவி. பிறந்தவிடம் புகுந்தவிடம் இரண்டும் விசேஷ பாண்டித்தியமுள்ள குலமாயிருந்ததால், இந்த அம்மாளுடைய கல்வியும்திறனும் குணமும் மணமும் நன்றாகச் சோபிக்கலாயிற்று. சுமார் 35-வருஷகாலம் அந்த அம்மாள் 'பாரதி' யென்னும் வங்காள பத்திரிகைக்கு ஆசிரியராயிருந்து இப்பொழுது மூப்பு மேலிட்டதனால் அவ்வேலையை விட்டு நீங்கி ஒழிவு தேடலாயினர்.

இந்த 'பாரதி' யென்னும் ஸ்வபாஷா பத்திரிகை 40-வருஷங்களுக்கு முன் அவர் குடும்பத்தாரால் பதிப்பிக்கத் தொடங்கலாகி இப்பொழுது வங்காள முழுவதிலும் மிகப்பெருங் கீர்த்தியும் பெற்ற மாதாந்தரப் பத்திரிகையாக விளங்குகிறது. இப்பத்திரிகையின் முதல் ஆசி

ரியர் ஸ்ரீமதி ஸ்வர்ணகுமார தேவியின் மூத்த சகோதரர். அவருக்குப் பின் இவர் பத்திராசிரியராக விருந்தார். இவர் மிஸ்டர் கோஸாலோடு சென்னைக்கு வந்திருந்தபொழுது இவரைப்பார்க்கும் பாக்கியம் பெற்றோம். இவருடைய திருமுகமண்டலம் இன்னும் நமது ஞாபகத்தில் அப்படியே அழியாது பதிந்து நிற்கின்றது. இந்தியா முன்னுக்கு வரவேண்டில் இவரைப்போன்ற பெண் ரத்னங்கள் தொகை மிகவும் அதிகரிக்கவேண்டும். இவருக்கு இங்கிலீஷ் நன்றாகத் தெரியுமானாலும், ஸ்வபாஷா விர்த்தியை நாடி அந்த பாஷையில் தானே உழைக்கத் தீர்மானித்து அத்தீர்மானம் தவறாது இத்தனை காலமாக உழைத்து வந்தார். இப்பொழுது அவருக்கு மூப்பு மேலிட்டு விட்டது. அவருடைய பதியை யிழந்த காரணத்தால் அவர் ஏகாங்கி (lonely) யாய்விட்டதாகக் கூறுகிறார். தேஹமும் மனமும் கிட்டத்தட்ட நாற்பது வருஷமுழைத்த உழைப்பால் இளைத்துக்களைத்து ஓய்வில் ஒழிவை நாடுகிறது என்கிறார்.

இவர் 'பாரதி' யென்னும் சிறந்த பத்திரிகையைநடத்தி வந்ததோடு வேறு விதங்களிலும் வங்காளபாஷையின் விர்த்தியைநாடி மிகவுழைத்து வந்திருக்கிறார். இவருடைய கிரந்தங்கள் பல பிரபலம்பெற்று வழங்குகின்றன. இவருடைய எண்ணமெல்லாம் ஸ்வபாஷா விர்த்தியிலும் அப்பாஷா விர்த்தியினால் பெங்காளிகளின் குணவிர்த்தியையும் நாடியதாயிருந்தது. இவருடைய எண்ணமும் நோக்கமும் எந்தமட்டும் நிறைவேறலாயிற்றென்று பிற்காலத்தில் தானே தெரியவருமென்றும், இவர் 'பாரதி' ஆசிரியர் வேலையை விட்டு நீங்கியது ஸ்வபாஷா பத்திரிகைளுக்கே ஒரு பெரு நஷ்டமென்றும் 'ரேய்ஸ் அண்டு ரயத்து' என்னும் பத்திரிகையின் ஆசிரியர் தமது பத்திரிகையில் கூறியிருக்கிறார். இலக்கியத்துறையில் புகுந்துழைப்பவர்களில் அனேகர் அவருடைய வழிபற்றி முன்னுக்கு வந்தவர்களென்றும் இப்படி அவருக்குள்ள சிஷ்யவர்க்கம் மிகுதியென்றும் மேற்கண்ட பத்திரிகையின் ஆசிரியர் கூறுகிறார். ஆனால் அவருடைய முக்கியநோக்கம் "கூலிக்கு மாரடிப்பார்" போலக் காசுக்கு எழுதும் கசடராம் கற்றவர்களையொழித்து வித்யேசுவரியின் பூரணோபாஸகர்களாயுள்ள வித்துவான்களையுண்டுபண்ண வேண்டுமென்பதாம். இத்துறையில் அவரெடுத்துக்கொண்ட முயற்சியும் பரிசிரமமும் விசேஷமானது. அவர்செய்த முயற்சி யெந்தமட்டும் பலித்ததென்று பின்னால் தான் தெரியவருமென்று அவரே கூறுகிறார்.

பாஷையின் விர்த்தி புஸ்தகங்களின் மலிவாலும் மிகுதியினாலும் மட்டும் உண்டாகமாட்டாது. "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்றாராதலால், "எண்ணினேன் எண்ணமிது ஸ்வாமி" யென்று, சித்த விருத்தி நிரோதத்தால் மனதை யடக்கியாளக்கற்று, தியான முதிர்ச்சியில் எண்ணினதோர் எண்ணத்தை எள்ளளவும் சிதைவுபடாது அப்படியே ஆணித்தரமான வார்த்தைகளால் வெளியிடக்கூடிய சக்தி வாய்ந்தவர்கள் எழுதும் கிரந்தங்களாலும் அக்கிரந்தங்களை பக்தி சிரத்தையோடு வாசிக்கிறவர்கள் அவருடைய எண்ணத்தைக் கிரஹித்து "பிரமரகீட" ஞாயமாய் அதன் மனனத்தால் அவர்களுடைய மனப்பாங்கை யறிந்து முடிவில் அவர்களுடைய மனோபக்குவத்தைப் பெறும்பாக்கியம் பெற்று உய்யவேண்டும். அப்படிப்பட்ட சக்தி எழுத்துக்கும் வார்த்தைக்கும் வார்த்தையாலமைந்த வாச்சியங்களுக்கும், வாச்சியங்களாலமைந்த கிரந்தங்களுக்கு முண்டு. ஆகையினால் தான் வார்த்தைக்கு மந்திரசக்தியுண்டென்று சொல்லுகிறது. "மனம் ஒருவழிப்பட்டது மந்திரம்" என்றிருப்பதால் மந்திர சக்தி யென்பது மனதை ஏகாக்ரப்படுத்தும் தன்மை வாய்ந்தது. கூருள்ள ஆயுதம் எப்படி நன்றாக வேலை செய்யுமோ அப்படிப் போல ஏகாக்ரப்பட்ட மனது அதன் வேலையை நன்றாகச் செய்யும். இந்த ஏகாக்ர சக்தியில்லாவிட்டால் மனம் தடித்து உணர்ச்சி கெட்டுப்போம். - உணர்ச்சி

கெட்டால் புத்தி மழுங்கிப்போம், புத்தி மழுங்கினல் அறிவு குன்றிப்போம், அறிவு குன்றினல் அஸ்தமன காலத்தில் கூடும் இருள் போல் மௌட்டியம் வந்து மூடிக் கொள்ளும்; மனக்கண் குருடாகும். இப்படியே எதிர்வழி சென்ருல் ஏகாக்ரசக்தி மனதுக்கு கிராகியசக்தியை யுண்டுபண்ண அது புத்திகூர்மையையும் புத்திவன்மையையும் உண்டுபண்ணும். புத்திகூர்மையினலும் புத்திவன்மையினலும் அறிவு விசாலித்துப் பரவும். அறிவு பரவப்பரவ விவேகம் விர்த்தியாகும். விவேகவிர்த்தியினல் மனக்கண் திறக்கும். மனக்கண் திறந்தால் மெஞ்ஞானவிசேஷத்தால் குணமும் மணமும் தானே வந்து அமையும். இதுதான் பாஷாவிர்த்திக்குக் காரணம். கலைகளெல்லாம் விர்த்தியாவது பாஷாவிர்த்தியினல். பாஷாவிர்த்தியும் சித்திவிருத்திநிரோதமாம் யோகசக்தியின் மஹிமையால். இதைத்தான் "Power of Assimilation" என்று நமது அரசர்பிரதிநிதிகூறினர். இது ஏகாக்ர சித்தமின்றி லபிக்காததால் "Concentration" என்னும் ஏகாக்ரசித்தம் இதற்கு இன்றியமையாத துணைக்கருவியாகும்.

ஸ்ரீமதி ஸ்வர்ணகுமாரதேவி நினைத்து முடிக்கக்கருதியவேலை இதுவே. இதன் வித்தை அவர் நன்ருகத் தெரிந்தெடுத்து உழுதநிலமாகிய மனப்பயிர்ச்சி பெற்றவர் உள்ளத்தில் ஊன்றியிருக்கிருர். அது முளைகண்டு வளர்ந்து கிளைத்துத் தழைத்திருப்பது தரிசனமாயினும் அதன் பலன் இனித்தான் தெரியவரவேண்டும். மனேபக்குவம் எல்லாம் மெஞ்ஞானப்பேறு பெறுதற்கும் பெற்ற பேற்றைப் பிறர் பயன்பட வழங்குவதற்குமாம். மனேபக்குவம் வித்து; மெஞ்ஞானப்பேறு முளை; பரோபகாரம் அதன் பலனுகிய சக்தி.

இந்த அம்மாள் பத்திரிகாசிரியர் வேலையில் நுழையும்பொழுது அதனல் காரியத்தில்தனக்குப்பலனுண்டாவென்று யோஜிக்கவில்லை. பிழைக்கும்வழி யாகுமாவென்றும் சிந்திக்கவில்லை. லாபநஷ்டம் என்னவென்றும் சிந்திக்கவில்லை. பின் ஏன் அவ்வேலையிற் புகுந்தாரெனில், அவரே சொல்கிருர் கேண்மின்: பத்திரிகைநடத்துவதை அவர் அஹத்தூய்மைக்குச் சாதனமான ஒரு பெரிய பணியாக நினைத்தார். அந்தப்பணிவிடை செய்வதில் ஒருவித சந்தோஷமிருக்கிறதென்று முணர்ந்தார். இஃதொன்றே அவர் மனதை உற்சாகப்படுத்தி அந்த வேலையில் தொடுபிடியாய்த்தொட்டு நின்றுழைக்கச்செய்தது. இப்பொழுது அவர் வேலைமுடிந்துவிட்டது. தேஹம் களைத்துளுத்துப் போய்விட்டது. மனமும் உழைத்துழைத்துத்தேய்ந்தொடுங்கிப்போயிற்று. இவ்விரண்டு லக்ஷணத்தையும் குறிக்க அவர் உபயோகித்துள்ளவங்காள வார்த்தைகளை இங்கிலீஷ் படுத்தினவர் "My done-up body and mind" என்று சொல்கிருர். வேலை செய்தால் ஓய்வு நாள் வாராதா? வரத்தான் வரும். அந்த ஓய்வு வருங்காலத்தில் பகவான் உழைத்தவுத்தாரைத் தம் திருவடிநீழலில் இளைப்பாறக் கூப்பிட்டழைப்பார். "Come unto me all ye that labour and are heavy laden" என்று சொன்ன வார்த்தை பொய்யல்ல. இத்தேஹம் எடுத்ததே கர்மவசத்தால்: ஆகையால் இதற்கு கர்மதேஹம் என்று பேர். கர்மதேஹம் அது செய்யவேண்டிய கர்மத்தைச் செய்து ஓய்வில் ஒழிவு பெற்ருல், அது பெற்ற ஒழிவில் ஒடுக்கம் தேடும். இதைத் தான் ஒழிவில் ஒடுக்கம் என்று மேலோர் சிறப்பித்துக் கூறியிருப்பது. இதை ஸ்தூல சூக்ஷ்ம காரணதேஹம் மூன்றுக்கும் பொருந்தப் பொருத்திப்பார்ப்பது மேலறிவாளர் பொறுப்பும் கடனுமாம்.

## THE WAR

### யுத்த சமாசாரம்.

"In the Western Theatre of War the past two or three days have been comparatively quiet after the tremendous fighting that has been proceeding."—*22nd May* 1915.

"சண்டை சமாசாரம் என்ன? கிணற்றில் கல்போட்டாற்போல் இருக்கிறதே!" யென்று கேட்டார் 'விவேகசிந்தாமணிக்கமிட்டி' மெம்பரில் ஒருவரான மாது. அந்த அம்மாள் கேட்ட கேள்வியும் அவர் எடுத்தாண்ட உவமானமும் ரொம்ப சரியாயிருந்தது. ஆனால் அதற்கு நாம் என்ன செய்யலாம்! யுத்தகளத்திலிருந்து வருகிற சமாசாரம் மிகவும் சொற்பம். அன்றியும் யுத்தமுனை சுமார் 260-மைல்தூரம் நீண்டு பரவியிருக்கிறது. பெல்ஜியத்தைச் சேர்ந்த ப்ளாண்டர்ஸ் மாகாணத்தில் வடகடல் ஓரம் தொட்டு 'என்' நதிக்கரை வழியாய் நீண்டோடும் யுத்தமுனையை ஏற்கனவே படத்தில் காட்டியிருக்கிறோம். அந்தச்சண்டை முனையைப்பின்னும் கவனித்துப்பாருங்கள்.*




* பெல்ஜியத்தின் வடமேற்கு மூலையில் ஒரு பாகம் தவிர மற்றதையெல்லாம் ஜெர்மானியர் பிடித்துக்கொண்டிருக்கிறார்களென்று தெரிகிறது. ப்ரான்ஸின் வடபாகத்தில் பிடித்துக் கொள்ளப்பட்ட பாகமும் அதில் நன்றாகத் தெரிகிறது. யுத்த முனையைக்காட்டும் இந்தக் கோட்டுக்குச் சில மைல்கள் முன்னும் பின்னுமாக சண்டைக்காரர்கள் முன்னணிப்படைகள்

நெருங்கிச் சண்டை செய்துகொண்டு வருகின்றன. நாம் எழுதுவது சிறுவர்களுக்கும் மாதர்களுக்கும் விஷயம்தெரியும் பொருட்டாதலால் அவர்கள் புத்திக்கெட்டாத விஷயங்களைப் பற்றி இங்கே பிரஸ்தாபிப்பதில் பிரயோசனமில்லை. ஆனல் அவர்களுக்குத் தெரியாதென்று நாம் ஒன்றையும் மறைக்கத் தேவையில்லை.

இப்பொழுது நடக்கும் இந்தப் பார'தப் போர் யுத்ததர்மத்தை ஒட்டி நடத்தப்பெறுவதாயில்லையென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். இது ராக்ஷஸப் போராயிருக்கிறது. வருஷமும் ராக்ஷஸ வருஷமாயிருக்கிறது. சைனியங்களின் புஜபலபராக்கிரமமும், கோட்டை கொத்தளம் முதலிய அரண்களும் சுமார் 18, 20, 21-மைல் தூரத்திற்கு குண்டுபோட்டுத் தகர்க்கத்தக்க (Long-range guns) பீரங்கிகளின் முன் என்ன பிரயோசனப்படும். ஆதலால் இருதரத்தாரும் நேர் நேராய் நின்று எதிர்த்துச்சண்டை போடுவதற்கில்லை. நிலத்தில் "Trenches" (ட்ரென்சஸ்) என்றுசொல்லும் நீண்ட அகழ்கள்வெட்டி அவைகள் ஒன்றுக்கொன்றுசேரச் சுரங்கவழிசெய்து பூமியின் தரைமட்டத்திற்குக் கீழே பதுங்கியிருந்து எதிரிகளின் படைவலி, போர்வலி, அரண்வலி முதலியவற்றை ஆகாயரதங்களின் மூலமாக அறிந்துகொண்டு பீரங்கிகளைக்கொண்டு அவர்கள் பதுங்கியிருக்கும் அகழ்களைத் தகர்த்துப் பிடித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

TRENCH WARFARE.

இப்படி நடக்கும் அகழி யுத்த முறையில் பீரங்கியும் வெடிமருந்தும் யாருக்கு அதிகமோ அவர்கள் கைதான் வலுக்குமல்லவா! அப்படி வலுத்தாலும் இங்கே ஒரு சண்டை நடந்தது எதிரிகள் அகழிகள் சிலவற்றை நாம்பிடித்துக்கொண்டோம். அங்கே ஒரு சண்டை நடந்தது எதிரிகள் நமது அகழிகள் (Trenches) சிலவற்றைப் பிடித்துக்கொண்டார்கள்: ஆனல் அவர்களை யெதிர்த்துத்தாக்கி அங்கிருந்து மறுபடியும் துரத்திவிட்டோம்—என்று, வருகிற யுத்த சமாசாரங்களெல்லாம் இவ்விதமாகவே யிருக்கிறது. இல்லாவிட்டால் இத்தனுவது நம்பர் குன்றைப்பிடித்துக்கொள்ள இத்தனை நாள் சண்டை நடந்தது. கடைசியில் நாம் அந்தக் குன்றைப் பிடித்துக்கொண்டோம் என்று செய்திவருகிறது. இதில் இரண்டொரு மைல் தூரத்துக்கு சண்டை முனை முன் பின் நகர்வதும், இங்கே சில அகழிகள் பிடிபடுவதும் அங்கே சில குன்றுகள் பிடிபடுவதுமா யிருக்கிறதே தவிர வேறு சங்கதி விவரம் ஒன்றும் தெரியவில்லை. ஆனல் இந்தச் சண்டைகளில் மாண்டு மடிந்தவர்கள் தொகை மட்டும் எப்போதும் மிகுதியாக விருக்கிறது. அதை நினைக்க நினைக்க மனம் உருகுகிறது. 'ஐயோ! பூமிபாரம் தீர்க்கவென்று நேர்ந்த பார'தப்போர் இப்படித்தான் நடக்குமோ!' என்றிருக்கிறது.

BATTLE OF NEUEV-CHAPELLE.

இடை இடையே இங்கே ஒரு பட்டணத்தைத் தாக்கிப்பிடித்துக் கொண்டார்கள். அங்கே யொரு கிராமத்தைப் பிடித்துக் கொள்ளக் கடும்போர் நடந்தது என்கிற செய்திவருகிறது. இப்படிப்பட்ட செய்திகளில் முக்கியமான ஒன்று 'நியூவ்சாபெல்' என்னும் கிராமத்தைப் பிடித்துக்கொள்ள வென்று அதைச் சுற்றி நடந்த பெருஞ்சண்டையாயிருக்கிறது. இந்த கிராமத்தைப் பிடித்துக் கொள்ள நடந்த கடும்போரில் பிரிடிஷ் சைனியங்களும் இந்திய சைனியங்களும் மிக்க தீரம் காட்டி ஜெர்மானியர்கள் வீரத்தைக் குலைத்து அவர்கள் படைவலியைச் சிதைத்து அந்த கிராமத்தைப் பிடித்துக்கொண்டார்கள். ஆனல் அவர்கள் செய்யக்கூடியது அவ்வளவுதான். அதற்கு அப்பால் செல்ல சாத்தியமில்லை. ஏனெனில் நீண்ட குறியுள்ள பெரிய பீரங்கிகள் சைனிய முழுவதையும் ஒரு வெடி யிரண்டு வெடியில் துடைத்து விழுங்கிவிடும். அப்படியே ஜெர்மானியரும் ஒரு மைல் இரண்டு

மைல் தூரம்தான் முன் வரலாம். அதற்கு மேல் வந்தால் நாசம்தான். ஏப்ரல் மாசம் கடைசி வாரத்தில் ஜெர்மானியர் (Ypres)—

SECOND BATTLE OF YPRES.

ஈப்ரெஸ் கால்வாயைத்தாண்டி ஈப்ரெஸ்பட்டணத்தைத் தாக்கினார்கள். அவர்கள் செய்த சூது அவர்களுடைய தீரத்துக்கும் வீரத்துக்கும் சிறப்பாயில்லை. ஆயினும் நடந்ததை நடந்தபடி இங்கே யுரைக்கவேண்டியது நமது கடமை பெருச்சாளிக்குப் புகைபோட்டுதிப் பிராணனை வதைப்பதுபோல் அவர்கள் ஒரு விதமான கெட்டகாற்றும் புகையும் உண்டு பண்ணும் வெடியை உபயோகித்து அதைக்கொண்டு இரண்டு மைல் தூரத்துக்கு பிரிடிஷ் சைனியங்கள் அகழில்தானே திக்குமுக்காடி மூச்சுவிடமுடியாமல் திண்டாடும்படிச் செய்து அந்தக் குழப்பத்தில் அவர்களையெதிர்த்துத் துரத்திவிட்டு ஈப்ரெஸ் பட்டணத்தை வெடிகுண்டு போட்டுத் தகர்த்தார்கள். ஆனால் பிரிடிஷ் துருப்புகளும் இந்திய துருப்புகளும் அவர்களுடன் சண்டைசெய்யும் கூட்டாளிகள் துருப்புகளும் சேர்ந்து அவர்களை எதிர்த்து மறுபடியும் துரத்திவிட்டார்கள். இதில் நேர்ந்த உயிர் நஷ்டத்துக்குக் கணக்கில்லை. இப்பொழுது ஜெர்மானியர் பிடித்துக் கொண்ட இடத்தை கூட்டாளிச் சைனியங்கள் மறுபடியும் பிடித்துக்கொண்டு விட்டதாக ஸர்ஜான் ப்ரெஞ்ச் அவர்கள் அனுப்பியுள்ள ரிபோர்ட்டால் தெரியவருகிறது. இங்கே நடந்த கொடிய சண்டைக்கு இரண்டாவது ஈப்ரெஸ் சண்டை யென்று பேர். முன்னம் (Calais) கலே பட்டணத்தைச் சேரவென்று ஜெர்மானியர்செய்த முயற்சி பயன்படாதொழியச் செய்த சண்டை முதலாவது ஈப்ரெஸ் சண்டையாகும்.

பிந்திவந்த சமாசாரத்தால் ஈப்ரெஸுக்கருகேயுள்ள நதிமுதலிய ஜலாதாரங்களைப் பாஷாண மிட்டுக்குடிக்கத்தகாதபடி செய்து போயிருக்கிறதாகத் தெரியவருகிறது. துப்பாக்கியினால் சுட்டால் அக்குண்டு பட்டவன் உடை தீப்பற்றிக் கொள்ளும்படியான தந்திரம் செய்திருக்கிறார்களென்றும் தெரியவருகிறது. இவையெல்லாம் யுத்தமுறைபல்ல.

'A NEUTRAL' IN THE *Times*.

"மார்ன் நதிதீரத்தில் நடந்த சண்டைபோல் இன்னொரு பெரியசண்டை நேர்ந்து ஜெர்மானியர் அவர்கள் கட்டிக்கொண்ட நாடுநகரங்களையெல்லாம் விட்டு ஜெர்மன் எல்லைக்குள் திரும்பியோடும்படியான கதிவரவேண்டும். கூட்டாளி சைனியங்கள் ஜெர்மன் எல்லைக்குள் பிரவேசித்து அவர்களை யெதிர்க்க வேண்டும். அப்பொழுதுதான் ஜெர்மானிய ஜனங்கள் இந்தச் சண்டைக்குக் காரணமான யுத்தத்தலைவர்களிடத்து தங்களுக்குள்ள நம்பிக்கையை முற்றும் இழக்க நேரிடும். அவர்கள் நம்பிக்கை போய்விட்டால் அப்புறம் ஜெர்மனியின் கதி அதோகதிதான்" என்று இச்சண்டையில் சம்பந்தப்படாத தேசத்தைச் சேர்ந்த ஒருவர் (ANeutral) லண்டன் டைம்ஸ் பத்திரிகைக் கெழுதியிருக்கிறார். அந்த அவசரம் எப்பொழுது நேரிடுமோ நாம் சொல்ல வழியில்லை. தற்காலம் ஜெர்மானியர் பிடித்துக்கொண்ட நாடுகளைப் பிடித்த வண்ணம் வசப்படுத்திக்கொள்ளப்பார்க்கிறார்கள். அது பலிக்காது போகும் காலம்வர மார்ன் நதி தீரத்தில் நடந்த சண்டையைப்போல் ஒரு பெரிய சண்டையும் அதன்பின் தலை கால் தெரியாது வந்தவழி பார்த்துக்கொண்டு ஓடும்படியான கதியும் நேரவேணு மென்கிறார்கள். கூட்டாளிகள் சைனியங்களும் அதற்கு வேண்டிய சமயத்தையே எதிர்பார்த்துக்கொண்டு ஜெர்மானியர் இப்பொழுதுள்ள இடத்துக் கப்பால் சிறிதும் பெருகவிடாமல் காத்து வருகிறார்கள்.

THE SITUATION IN THE EASTERN THEATRE & THE DARDANELLES.

கிழண்டைப் போர்க்களத்தில் ப்ரஸ்மிஸ்ல் கோட்டை பிடிபட்டது முதல் கூட்டாளிகள் கை கொஞ்சம் வலுத்தே யிருக்கிறதாகச் சொல்லலாம் என்று தெரியவருகிறது. மே

லண்டைப் போர்க்களத்திலும் கூட்டாளிகள் கையே வலுத்திருக்கிறது என்று சொல்கிறார்கள். இவ்விரண்டு போர்க்களங்களைத் தவிர மத்தியதரைக் கடலில் துருக்கியின் மீது சண்டை தொடுத்து 'டார்டனெல்ஸ்'(Dardanelles) ஜலசந்தி வழியாக கூட்டாளிகள் கப்பல் நுழைந்து கடலோரத்திலுள்ள பட்டணங்களைப் பிடித்துக்கொள்ள முயன்று வருகின்றன. அந்த சண்டை இன்னும் நடந்து கொண்டே வருகிறபடியால் அதைப்பற்றி விவரமா யொன்றும் எழுதுவது சாத்தியமாயில்லை. மேமீ 19உ யிட்ட தந்தி சமாசாரத்தால் கூர்க்கா படைகள் அங்கே சண்டை செய்து வருகிறதாகவும் 12உயில் நடந்த சண்டையில் அவர்கள் எதிரி படைகளை முறியடித்துத் துரத்தினதாகவும் தெரியவருகிறது. இது ப்ரெஸ் பூரோ (Press Bureau) அதிகாரிகள் அனுப்பிய தந்தி சமாசாரம்.

---

## ITALY AND THE WAR.

London, May 24, 1-20. A. M. Italy has declared war on Austria.—*Telegram.*

ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தலி இம்மூன்று தேசத்தார்களும் "Triple Alliance" என்று சொல்லும் உடன்படிக்கை செய்து கொண்டவர்கள். அதன்படி இம்மூவர் மற்றவர்களுடைய சம்மதியின்றி எத்தேசத்தாரோடும் வலுவில் சண்டைக்குப் போகக்கூடாது. சென்ற வருஷம் ஜுலைமீ ஆஸ்திரியாவுக்கும் ஸெர்வியாவுக்கும் சண்டை யுண்டானபொழுது ஆஸ்திரியாவும் ஜெர்மனியும் இத்தலியினுடைய சம்மதியைக் கேட்காமல் தானே சண்டை தொடுத்துவிட்டார்கள். இது ஷை உடன்படிக்கைக்கு விரோதமென்றும், அதை மீறி நடந்ததால் இத்தலிக்கு பாதக முண்டாயிற்றென்றும் அப்பொழுதே முறையிட்டார்கள். முறையிட்டும் கேட்கவில்லை. இப்பொழுது அந்த மனஸ்தாபம்முற்றி இத்தலி ஆஸ்திரியாவின்மீது சண்டை தொடுக்கலாயிற்று. ஜெர்மனி ஆஸ்திரியாவோடு சேர்ந்துகொண்டிருப்பதால் அவர்களும் இத்தலிக்கு விரோதமாகவே சண்டை மீறி பிரவேசித்திருக்கிறார்கள். ஜெர்மனி, ஆஸ்திரியா, துருக்கி மூன்றும் ஒரு பக்கம் இருந்துவர மற்ற தேசங்கள் எதிர்பக்கமாய்விட்டன. இத்தலி பிரிடிஷ், ப்ரெஞ்ச், ருஷிய கூட்டாளிகள் பக்ஷமாயிருந்து சண்டைபோடலாமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

---

## THE BRITISH CABINET.

### பிரிடிஷ் மந்திராலோசனை சபை.

பிரிடிஷ் மந்திராலோசனை சபையில் சில முக்கிய மாறுதல்கள் நேரிட்டிருக்கிறது. மிஸ்டர் அஸ்குவித் (லிபரல் கக்ஷித்தலைவர்) எதிர்க்கக்ஷியாகிய கன்ஸர்வேடிவ் கக்ஷியாரால் இந்த யுத்தம் நடக்கிற காலத்தில் "வீடு இரண்டு பட்டால் கூத்தாடிக் கொளிது" என்கிறபடி உள்நாட்டில் கக்ஷிப்பிரதிக்கக்ஷி கூடாதென்றும் எல்லாக் கக்ஷியாரும் சேர்ந்துள்ள நாஷனல் கவர்ன்மெண்டு ஏற்படுத்த வேண்டுமென்றும் சொல்லி வற்புறுத்த இப்பொழுதுள்ள கவர்ன்மெண்டு தரப்பார் அதற்கு இசைந்திருக்கிறார்கள். அவர்கள் இசைந்திருப்பதின் பலனாக எல்லாக்கக்ஷியும் சேர்ந்த மந்திராலோசனை சபையொன்று ஏற்படுத்தப்பெறும். அதில் மிஸ்டர் அஸ்குவித் முதல் மந்திரியாகவே யிருப்பார். ஸர் எட்வர்ட் க்ரே யவர்களும் அந்யதேச மந்திரியாகவே யிருப்பார். லார்ட் கிட்சனர் யுத்த மந்திரியாக விருப்பார். கப்பற்படையிலாகா மந்திரியான மிஸ்டர் வின்ஸ்டன் சர்ச்சில் அந்த இலாகாவை விட்டு வேறு இலாகாவுக்குப் போவார். மிஸ்டர் பால்போர், மிஸ்டர் போனர் லா, லார்ட் லான்ஸ்டௌன், லார்ட் கர்ஸன் இவர்கள் எல்லாரும் மந்திரிகளாக வருவார்கள். இவர்களுக் கிடங் கொடுக்கவென்று இப்பொழுதுள்ள மந்திரிகளிற் பலர் தங்கள் வேலையை இராஜிநாமா கொடுத்து விடுவார்கள். புதிய மந்திராலோசனை சபை மெம்பர்கள்விவரம் 48-வது பக்கத்தில் பார்க்க.

## THE PASS OF THERMOPYLAE.

### தர்மாப்பிலே கணவாய்.

ஐரோப்பாகண்டத்தில் விளங்கும் தற்கால நாகரிகத்திற்குப் பிறப்பிடமாகிய கிரீஸ் தேசமானது, பூமத்தியதரைக்கடலின் வடகிழக்குப் பாகத்திலனேக சிறிய தீவுகளால் சூழப்பட்ட வொருதீபகர்ப்பமாம். சிறந்த நீர்வளம் நிலவளம் முதலிய செல்வங்கள் இத்தேசத்திற்கின்றெனினும், பரந்துயர்ந்த மலைகளுக்கும் பொங்குங்கடலுக்கு மத்தியில் வசித்த இத்தேசத்தவர்கள் தமது தேசவமைப்பால் சரீரப்பிரயாசங்களுக்கும் இடைவிடாத கடினமுயற்சிகளுக்கும் வழக்கப்பட்டவர்களாய் மிக்கதீரர்களாயும், திடகாத்திரர்களாயும் மிகுந்த கூர்மைப் புத்தியுடையவர்களாயும் தேர்ந்தனர். இக்கிரேக்கர் அனைவரும் ஒரே ஜாதியராயும் இவர்களது மதக்கொள்கைகள், பாஷை, யுடை, நடை, பாவனைகள் யாவும் ஒரேமாதிரியாயுமிருப்பினும், வர்க்கபேதத்தினால் பல வகுப்பினர்களாகப் பிரிந்து வகுப்புக்கு வகுப்பு வெவ்வேறு மாகாணங்களைக் கைப்பற்றியும் வெவ்வேறு பரிபாலனமுறைகளைக் கைக்கொண்டு சிற்சில சமயங்களில் ஒருவரோடொருவர் போர்புரிந்தும், பின்னர் சமாதானமாய் யாவரும் ஒருமித்துப் பொது எதிரிகளின்பேரில் போர் நடத்தியும் விபக்த குடும்ப சகோதரர்கள்போலக் காலங்கழித்து வந்தனர்.

கிரேக்க ஜாதியாரின் உட்பிரிவினர்களுள் பிரதான வகுப்பினர்கள் ஆத்தன்ஸ் (Athens) மாகாணத்தவரும் ஸ்பார்ட்டா (Sparta) மாகாணத்தவருமே. பிரஸ்தாப காலத்தில் ஆத்தன்ஸ் மாகாணத்தவர் கொடுங்கோன்மன்னனொருவன் தங்களை வருத்தப்படுத்தியதினிமித்தம், அவனைச் சிம்மாசனத்தினின்றும் அகற்றி 'ரிப்பளிக்' என்ற குடியரசு சபையை நியமித்தார்கள். மற்றமாகாணத்திலோ வென்றால், ஜனங்களால் நியமிக்கப்பட்ட இரண்டு அரசர்கள் ஒருமித்து ராஜ்ஜிய பாரம்வகித்து வந்தனர். இப்பிரதான நாடுகளைத்தவிர, கிரீஸ்தேசத்தில், போஷியா, பிளட்டீயா, காரிந்த் முதலிய மாகாணங்களும், ஆசியா கண்டத்திலும் ஐரோப்பா கண்டத்தின் தென்மேற்குப் பிராந்தியங்களிலும் விடாமுயற்சியுடைய கிரேக்கர்கள் குடியேறிய சில பிரதேசங்களுமே இச்சாதியாரால் ஆளப்பட்டுவந்தன.

பிரஸ்தாபகாலத்தில் ஆசியாகண்டத்தில் மட்டுமன்று, பூகோளத்திலுள்ள ராஜ்ஜியங்கள் யாவற்றிற்குள்ளும், ஜனத்தொகையிலும், செல்வத்திலும், படைப்பெருக்கத்திலும் சிறப்புப் பெற்றிருந்தது பாரசீக ராஜ்ஜியமே. நமது இந்துதேசத்தின்கண் ஜனத்தொகையிற் கடையரேனும், கல்வியிலும், வியாபாரத்திலும், நாகரிக முறைமைகளிலும், முதன்மை செலுத்தி வருகின்ற பம்பாய் பாரசீ ஜீபாய்களுக்கு முன்னோர்களிவர்களே. கிழக்கே ஸிந்துநதி வரையிலும் மேற்கே நீலநதி பரியந்தமும், தென்வடலாக காஸ்பியன் என்ற கடல் போன்ற ஏரிமுதல் இந்தியமகா சமுத்திரம் வரையிலும் பரந்த பூமி முழுவதற்கும் சக்கிரவர்த்தியாகிய பாரசீகவரசனது ஆக்கினைகளெல்லாம் "இதனால் எல்லா ஜாதியாருக்கும் சகல தேசத்தவர்களுக்கும், ஸர்வமதஸ்தர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில்" என்றே ஆரம்பித்தன. இவ்வரசனது பிரதிநிதிகளாகிய 'சாட்ராப்'களே (Satraps) விஸ்தீரணமான தேசங்களை இவன் பெயர் சொல்லி யாண்டு வரவும், சால்டியர்கள், யூதர்கள், எகிப்தியர்கள், அராபியர்கள் முதலிய இன்னும் பலஜாதியார்கள் இவ்வரசனுக்குக் கப்பம் செலுத்தி வரவும் இருந்ததென்றால், தன் ஆக்கினைகளை எல்லா ஜாதியார்களுக்குமென்று பிரசுரம் செய்வது வீண்பெருமை யென்னலாமோ? அத்தேசங்களிலிருந்தெல்லாம் எண்ணற்ற சேனைகளைத் திரட்டித்தினந்தோறும் புதிய நாடுகளைக் கவர்ந்துகொள்வதே பாரசீக அரசனது பொழுது போக்காயிருந்தது.

கிரீஸ் தேசத்தில் 'ஆத்தன்ஸ்' மாகாணத்தில் கொடுங்கோன் மன்னனைத்துரத்தி குடியரசு ஏற்படுத்தி ஜனசபை மூலமாய் ராஜ்ஜிய பரிபாலனம் செய்துவந்தார்களென்று சொன்னோம். இச்சிம்மாசன மிழந்தவரசன் பாரசீக சக்ரவர்த்தியின் பக்கல் சரணடையவே, இவன், மன்னனுக் கடங்காத குடிகளின்பேரில் படையெடுத்து அவர்களை அரசன் கீழ்க் கட்டுப்படுத்தவும், கிரேக்கர்கள் யாவரையும் பாரசீக ராஜ்யத்திற்கு உள்ளடங்கச் செய்யவும் கருதி, இது சாத்தியமாக ஒரு பெருஞ் சேனையைத் திரட்டிக்கொண்டு கிரேக்கர்கள் பேரில் படையெடுத்துச் செல்லவும், இவர்களெல்லோரும் தத்தமக் குரிய மாறுபாடுகளை மறந்து, ஏகோபித்து, 'மரதான்' (Marathan) என்னுமிடத்தில் மகாவரசனை முறியடித்து அவன் சைன்னியங்களையும் சிதறியோடச் செய்துவிட்டார்கள்.

தனது பராக்கிரமத்தால் எளிதில் ஜயிக்கக் கூடிய ஒரற்ப ஜாதியாரென்று கருதியிருந்தவர்களால் தன் கர்வங்குலைய முறியடிக்கப் பட்டதனாலாகிய மனவருத்தமடங்காது, முன் சேகரித்த சைன்னியத்தினும் பதின்மடங்கு படைகளைத் திரட்டி யின்னுமொருதடவை போர் நடத்த வெத்தனிக்குங்கால் அத்துர்ப் பாக்கியனான வரசன் மரணமடைந்தான். பத்துவருடகாலமாகக் கிரேக்கர் நிர்விசாரமாயிருந்தனர்.

அவனுக்குப்பின் பட்டத்துக்கு வந்த க்ஸர்க்ஸஸ் (Xerxes) என்ற புதிய அரசன், கிரீஸ் தேசத்தின் மீது படையெடுக்கும்பொருட்டுத் தன்னாட்சிக்குள்ளடங்கிய பற்பல தேசங்களிலிருந்தும் போர்வீரர்களைத் தெரிந்தெடுத்துக், கணக்கற்ற சேனைகளைத்திரட்டினான். இவ்வரசன் ஒருபாயம்செய்து, தனது சேனைகளை இரண்டு பாகங்களாகப் பிரித்து ஒரு பிரிவைக் கப்பல்வழியாய்க் கிரேக்க நாட்டில் செலுத்திக் கொண்டு போகவிட்டு மற்ற பாகத்தைத் தானே நேரில் நடத்தி 'ஹேல்லஸ்பாண்டு' என்ற ஜலசந்தியைப் படகுபாலத்தாற் கடந்து தென்மேற்கு முகமாகக் கிரீஸ் தேசத்திற்குள் பிரவேசிக்கச் சென்றான். சேனைகள் பிரவேசிக்குமுன் மகா வரசனது தூதர்கள் கிரேக்க மாகாணங்களுக்கு வந்து சக்ரவர்த்தியின் ஆக்கினைகளுக்கு அடங்கி, நாடும் நதியும் அவனதேயென்றங்கீகரிப்பதற் கடையாளமாக நீரும் மண்ணும் கொடுவென்று கேட்கவே, அரசனது படைகள் செல்லும் மார்க்கத்தில் முதலில் நின்ற தெஸ்ஸலி (Thessaly) ராஜ்ஜியத்தைத் தவிற வேறெந்த மாகாணமும் இவ்வடிமைச் சின்னத்திற்குடன்படவில்லை.

கிரீஸ் தேசமானது, இயற்கையாகவே, வடபாகம், தென்பாகமென்ற விரண்டு பிரிவுகளாக அமைந்துளது. மத்தியில் 'காரிந்த்' (Corinth) என்ற பூசந்தி இவ்விரண்டு பாகங்களையும் இணைக்கின்றது. இப்பூசந்தியில் சபைகூடித் தங்கள் நாட்டுக்குவந்திருக்கிற இக்கொடிய விபத்தை நிவர்த்திக்குமாறு ஆலோசனைசெய்து யுத்தசான்னித்தியங்கள் ஏற்பாடு செய்யும்பொருட்டு கிரேக்க மாகாணங்கள் யாவும் முறைப்படி இவ்விடத்திற்குத் தங்கள் பிரதிநிதிகளையனுப்பின.

கிரீஸ் தேசம் மலைத்தொடர்கள் அடர்ந்ததென்று சொன்னோம். ஆதலால் தென்முகமாகவருஞ் சேனையானது சமபூமிமார்க்கமாகவே அணிதொடுத்து வருவதென்பது அசாத்தியம். பலவிடங்களில் மலைக்கணவாய்களின் வழியாகவே செல்லவேண்டிவரும். இம்மலைத் தொண்டுகள் ஒடுக்கமானவைகளாதலால் இவ்விடங்களைக் காக்கும்சொற்ப மனிதர்கள் பெருந்தொகைப் படைகளை யெதிர்த்து அழித்துவிடலாம். மேலும், கிரேக்கவீரர்கள் ஆசியாகண்டத்தவர்களை விடப் புஜபலபராக்கிரமமுடையவர்கள். ஆகவே, இவர்களுக்கு அப்படிப்பட்ட தொண்டுகள் அகப்பட்டால் கேட்கவேண்டுமா.

பாரசீக சைன்னியம் முதல் முதலாகக்கடந்து வரவேண்டிய கணவாயானது டெம்பீ கண

வாயே. இதைக் காக்கும்பொருட்டுச் சில படைகளையனுப்ப, இருந்து சண்டைபோடு வதற்குத் தகுந்த இடமில்லாததனாலும், அதைக்காத்தும் பிரயோஜனமில்லாதது கொண்டும் இவர்கள் திரும்பி வந்துவிட்டார்கள். இதற்கு அடுத்த கணவாய் உலகெங்கும் பிரசித்தி பெற்ற தர்மாப்பிலே (Thermopylae) கணவாயே.

தென்முகமாகவருஞ் சேனையானது முதல் முதல் தெஸ்ஸலே (Thessaly) மாகாணத்திற் பிரவேசிக்கின்றது. இம்மாகாணத்தின் தெற்கு எல்லை 'ஈட்டா' மலைத்தொடரே. இப்பர்வதமானது 'தெஸ்ஸலே' மாகாணத்திற்கும், அதற்குத் தெற்கேயுள்ள 'போகியா' வென்ற மாகாணத்திற்கும் மத்தியிலுள்ளது. மலையினது அடிவாரமும் அதைச்சார்ந்த காடுகளும் சமுத்திரக் கரையோரம் வரையிலும் படர்ந்து கடலோரமாக ஒரு சிறிய கணவாயைத் தவிர வேறு மார்க்கங்களொன்றும் கொடாது, தென்பாகத்திற்கு ஒரு மதில்போலிருந்தது. இக்கணவாயில் காவல்வைத்துப் பாரசீக சைன்னியம் முழுவதையும் சிதறடிக்க உத்தேசித்தார்கள். சமுத்திரமார்க்கமாய்ச் சைன்னியங்களைக்கட்டத்திக் கணவாயின் தென்புறமாகக் கொண்டு போகாமலிருக்கும்பொருட்டு இக்கணவாய்க்கு எதிர்புறமேயுள்ள 'யோபியா' வென்ற தீவுக்கும் நாட்டுக்கும் மத்தியிலுள்ள ஜலசந்தியின் முகத்துவாரத்தில் கிரேக்கர்கள் தங்கள் போர்க் கப்பல்களை நிறுத்திவைத்திருந்தார்கள்.

இவ்விடத்தில் நின்றுப் பாரசீக சைன்னியக் கோடிகளை எதிர்க்கும்படி அனுப்பப்பட்ட படைகட்குத் தளகர்த்தன் 'லியானிடாஸ்' (Leonidas) என்பவனே. இச்சுத்தவீரன் 'ஸ்பார்ட்டா' வுக்குரிய இரண்டு கூட்டரசர்களுள் ஒருவன். ஸ்பார்ட்டா தேசத்தரசனொருவன் தன்னுயிரைக் கொடுப்பதனால் தன் தேசத்துக்குவந்த மகா விபத்தொன்று நீங்கிப்போகுமென்று ஒரு புராதன வசனம் இவன் ஞாபகத்திற்குவரத் தன்னுயிர் இச்சண்டையிலுடலினின்றும் வேறுபடுமென்றுறுதியடைந்தான். தலைபோகக் கால் பிழைப்பதுண்டோ! தளகர்த்தன் தன்னுயிரை அர்ப்பணம் செய்யவேண்டிவரின் ஸ்பார்ட்டர்களோ தங்கள் உயிரைக் காப்பாற்றுகிறவர்கள்! இதுகாரணம்பற்றி 'லியானிடாஸ்' தனக்களிக்கப்பட்ட முன்னூறு ஸ்பார்ட்டர்களையும் தெரிந்தெடுப்பதில், அவர்களுடைய வீரியம், பலம், முதலியவைகளைப் பார்த்துக்கொள்வதுடன், ஒரு வேளை யாவரும் யுத்தத்தில் இறந்துபோகும்படி நேரிடினும் ஒருவம்சமும் வேரற்றுப்போகாதபடிக்கும் ஜாக்கிரதை வைத்துத் தெரிந்தெடுத்தான். யுத்தகளத்தில் இறந்துவிட்டால் தங்களுக்கு அந்தியகர்மம் நடக்குமோவென்று சந்தேகித்துப் புறப்படு முன்னமே, வேண்டிய சடங்குகளைத் தம்முயிருள்ளபோதே செய்துவிட்டுச் சஞ்சலமற்ற மனதினராய்ப் புறப்பட்டனர். இம்முன்னூறு ஸ்பார்ட்டர்களும் இவர்களுடைய அடிமைகளும் தவிரச் சுமார் மூவாயிரம் கிரேக்கர் இவன் வசம் அனுப்பப்பட்டனர்.

கணவாயை வந்தடைந்ததும் இதன் அரண்கள் பாழாய்க்கிடந்ததைக் கண்டார்கள். ஏனெனில் மலையின் ஒருபுரத்திலிருந்து மற்றொருபுரத்திற்குப்போக வேறொரு இரகசியமான மார்க்கம் கண்டுபிடிக்கப்பட்டதும் இக்கணவாயைப்பற்றி ஒருவரும் வெகுநாளாகக் கவனிக்கவில்லை. இரகசியமான வழி 'போகியர்'களுக்குமட்டுமே தெரிந்திருந்ததனால், இவர்கள் லியானிடாஸண்டை வந்து தாங்கள் அப்பாதையைக் காத்துக்கொள்வதாயும் அவ்வழியொன்றிருப்பதென்பது எதிரிக்குத்தெரிய ஏதுஇல்லை யென்றும் அப்படியவனறிவுக்கு எட்டினும் இலகுவாய் அத்தொண்டைத் தங்களால் காத்துக்கொள்ள முடியுமென்றும் உறுதிசொல்லச் சேனாதிபதி யந்த ரகசியமான பாதையைக் காத்துக்கொள்ளும்படி அவர்களுக் கனுமதிகொடுத்துவிட்டுத் 'தர்மாப்பிலே'

கணவாயிலுள்ள மதல் முதலியவைகளில் இடிந்துபோனவற்றைச் செம்மைப்படுத்திப் பாரசீக சைன்னியங்கள் வருவதை எதிர்பார்த்திருந்தான்.

மகாவரசனது சைன்னியம் வந்துசேர்ந்தது. ஐயோ! அதன் தொகையை என்னவென்று சொல்லுவேன்! பார்! இருபது முப்பது லக்ஷத்துக்கு மேலாகவே யிருந்ததன்றி குறையவில்லை.

மகாவரசன் கணவாயை வந்தடைந்ததும், கிரேக்கர்களுடைய சேனுபலம், சைனியவமைப்பு முதலியவற்றைக் கண்டறிந்து வரும்படி வேவுகாரரையனுப்ப அவர்கள்வந்து, ஸ்பார்ட்டர்கள் மதில்களின்மீது உட்கார்ந்துகொண்டு தமது நீண்ட கூந்தல்களை வகிரெடுத்து வாரிக் கொண்டுல்லாசமாயிருப்பதைப் பார்த்தோமென்று தெரிவித்தனர்.

அரசன் ஆச்சரியமடைந்து தன் பக்கத்திலிருந்த நாடிழந்த கிரேக்கமன்னனெருவனைப் பார்த்து யுத்தமுனையில் இவர்கள் இவ்வளவு அலட்சியமாயிருப்பதற்குக் காரணம் யாதென வினவ, அம்மன்னன் "மகாராஜனே, இது ஸ்பார்ட்டர்களுடைய வழக்கம்; யுத்தம் மிகவும் கடூரமாக நடக்கப்போகிறதென்று தெரியுங்கால், இப்படியே தங்கள் கூந்தல்களை வாரிக்கொண்டு மரணத்தை யுல்லாசமாய் எதிர்பார்த்துக்கொண்டிருப்பதிலவர்களுக் கொரு பெருமை" யென்றான்.

பாரசீக சைன்னியங்கள் கணவாயண்டை வந்ததும், இத்தொண்டினின்றும் கிரேக்கர்களைத் துரத்தும்பொருட்டுத் திரள்திரளாய் மிக உக்கிரத்தோடு இவர்களை எதிர்த்தன. சமுத்திரத்தின் அலைகள் ஒன்றன்பின்னென்றாகவந்து கடலோரத்திலுள்ள வொருகருங்கற் பாரைமீது மோத, அவ்வலைகள் தாமே சின்னபின்னமாய்ச் சிதறுண்டுபோவதல்லால் கருங்கல்லினெரு அணுவையும் கரைக்கமாளாததுபோலப் பாரசீகப் படைகள்யாவும் வரிசை வரிசையாய்க் கிரேக்கவீரர்களை யெதிர்த்து வரவே, இவர்கள் அப்படைகளின் பெரும்பான்மையோரை யவ்விடத்திலேயே பூமிஸ்தாபனம்செய்ய, மற்றவர்கள் இவர்கள் கதியே நமக்குமென்று பயந்து சேனுதிபதிகள் தங்களை யீட்டிமுனையால் நடத்துவதையும்* சட்டைசெய்யாது திக்குக்குத்திக்காக வோடவாரம்பித்தனர். தன் படைகளுக்குள் பராக்கிரமமுடையவர்கள் ஆயிரக்கணக்காய் மாண்டு கிடப்பதையு மின்னும் பலர், கிரேக்கர்களுக்குப் பின்னிட்டு யுத்தகளத்தினின்று ஓடி வருவதையும் பார்த்து மகா வரசன் சிங்காதனத்தினின்றும் பலதடவை குதித்துத் திகைக்கலாயினன். இவ்வாறு இரண்டு தினங்கள் கழியவும் மகாவரசன் மனஞ்சோர்வடையவே 'டிமார்டஸ்' என்னும் கிரேக்கனெருவன் தன் தேசத்துரோகியாகவந்து, மகாவரசன் பக்கல் சென்று தனக்கோர் இரகசியமான மார்க்கம் தெரியுமென்றும், மிகப்பொருள்கொடுப்பின் அப்பாதையைத்தான் காட்டுவதாயும், அவ்வழியாய்ச் சென்றால் கணவாய்க்குப் பின்புறமாய் வந்து அதைக்காத்துக்கொண்டிருக்கும் கிரேக்கர்களைச் சூழ்ந்துகொண்டு கணவாயைக்கைப்பற்றுவதுமன்றி யப்பால் கிரீஸ்நாட்டின்மீது இலகுவாய்ப் படைதொகுத்துச் சொல்லலாமென்றும் கூறினன். கும்பிடப்போன தெய்வம் குறுக்கேவந்தாற் போலாயிற்று! அன்றிரவே, இக்கிரேக்கன் வழிகாட்ட, ஒரு பாரசீக சைன்னியம் அவன்பின் புறப்பட்டது. விடியுமுன்னமே 'போகியர்கள்' காவலிருந்த விடத்தையடைந்தது. திடீரென்று ஒரு பெருஞ்சேனைவந்து சரமாரி பொழிவதைப்பார்த்துத் திடுக்கிட்டுப் 'போகியர்கள்' அவ்விடத்தைவிட்டுச் சற்று உயர்ந்த விடத்திற்கு விலகவே பாரசீகசைன்னிய மித்தொண்டில் யாதொரு தடையுமுறாது தன் வழியே சென்றது.

இச்செய்தி லியானிடாஸுக்கு எட்டியதும், இனித்தொண்டைக்காப்பாற்றுவ தசாத்தியமென்றறிந்து, இனிமேலும் எதிரிகள் தங்களைச் சூழ்ந்துகொள்வதற்குமுன்னமே,

தொண்டினின்றும் கீழிறங்கித் தப்பித்துக் கொள்ளப் பொழுதிருப்பதால் அவ்வண்ணஞ் செய்ய விரும்புவோர் போகலாமென்றனுமதி கொடுக்க, இவ்விடையின்படி சேனையில், ஸ்பார்ட்டர்களையும் மற்றும் வேறு சிலர்களையும்தவிரமற்றவர்கள் யாவரும் திரும்பிப்போயுயிரைக்காப்பாற்றிக்கொண்டனர். ஸ்பார்ட்டர்களோ தங்கள் சேனாதிபதியுடனிருந்து உயிரிழப்பதொழியப் பின்வாங்கியுயிர் பிழைப்பது தங்களுக்கு மிகவும் பழிப்புக்கேதுவென்று கருதியிருந்தனர்.

ஸ்பார்ட்டர்களே கிரேக்க ஜாதியார்கள் யாவர்க்குள்ளும் மிகுந்ததீரர்கள். கல்வியையும், செல்வத்தையும், நாகரிக நடவடிக்கைகளையும் அலக்ஷியஞ்செய்து, ஜனனமுதல் மரணபரியந்தமும், தேகாப்பியாசத்திலும், யுத்தப் பயிற்சியிலுமேமிக்க கருதலுடையவராயிருந்தனர். இச்சாதியாரினது ஆசாரங்களும், மதக்கொள்கைகளும், பரிபாலன முறைமைகளும் தேகப்பயிற்சிக்கே சாதனங்களாயிருந்தன. குழந்தைபிறந்ததும் அதை ஒரு தினமுழுவதும் ஆடையின்றி வெளியேபோட்டிருந்து, "பனியால் நனைந்து வெயிலாலுலர்ந்து" கிடந்ததன்பின் அப்பால் பிழைத்தகுழந்தைகளையே தாய்மார்களெடுத்து வளர்ப்பது வழக்கம். ஸ்பார்ட்டாவிலுள்ள தாய்மார்கள் தங்கள் பிள்ளைகள் யுத்தத்திற்குப் போகும்பொழுது அவர்களைத் தைரியப்படுத்தி "உன் பரிசத்துடன் வந்துசேர்," அல்லது உன் பரிசத்தின்மேல் (அதாவது இறந்ததும் தூக்கி) வந்துசேர்" என்றாசிர்வதித்தனுப்புவார்களாம். இச்சாதியாரின் கட்டுப்பாடுகளின்படி, கொலைகளவு முதலியவைகளும்கூட அவ்வளவு இழிவான செய்கைகளல்ல; பஞ்சமாபாதகங்களுக்கு மொருக்கால் பிராயச்சித்தமுண்டு; ஆனால் யுத்தகளத்தினின்றும் பின்வாங்கி வந்தவர்கள் ஆளாகும் பழிப்பேபழிப்பு அப்படிப் பின்வாங்கினவனையும் அவனை யடுத்தாரையும் என்னசெய்யினும் தோஷமில்லை.

மறுநாட் பொழுது விடிந்தது. சூரியோதயமான ஒரு மணிநேரத்திற்கெல்லாம் படைகளிலனேகர், கணவாயினின்றும் கீழேயிறங்கிப் போகலாயினர். ஸ்பார்ட்டாவிலிருந்து வந்திருந்த விரண்டு ராஜகுமார வாலிபர்களின்பேரில் லியானிடாஸ் இரக்கமுற்று இவர்களை எவ்வகையாகவேனும் உயிர்பிழைக்கச் செய்யவேணுமென்றெண்ணி அவர்கள் மூலமாய்ச் சமாசாரஞ் சொல்லியனுப்புவதுபோலொரு வியாஜம்வைத்துக் கடிதங்கள் வரைந்துகொடுக்கவே பொருபுதல்வன் "நான்சண்டைசெய்ய வந்தேனேயொழியக் கடிதஞ்சுமந்து கொண்டுபோக வரவில்லை" யென்றான். மற்றொருவன் "ஸ்பார்ட்டாவிலுள்ளவர்கள், என்னைப்பற்றி வேண்டிய சமாசாரங்கள்யாவு மென் செயல்களாலறிந்துகொள்வார்கள்" என்றான். யாரோவொருவன், பாரசீகர்களது சரங்கள்சூரியகிரணங்களையு மறைக்கு மாறவ்வளவு அடர்த்தியாய்ப் பொழிகின்றனவெனவே யிதைக்கேட்டவொரு ஸ்பார்ட்டன், "அவ்வளவுக்கவ்வளவு நல்லது தான், நாம் நிழலிலிருந்து சண்டைபோடலாம்" என்றான். யாவரும் கடைசியாகத் தங்களதுணவைப்புசிக்கப் போகையில் லியானிடாஸ் "இன்றிரவில் நம்மெல்லோருக்கும் தருமனது மாளிகையில்விருந்து" என்றான்.

இதுவரையிலும் சண்டை செய்யும்பொழுதுதன் படைகளுக்கு அதிக உயிர்ச்சேதமின்றியிருக்குமாறு மதிலினுட்புறத்தினின்று கொண்டே போர் புரிந்துவந்தான். இனியோ, கணவாயின் பின்புறமாக வேறொரு சைன்னி

யம் தாக்குவது சித்தமாகவே உயிர்பிழைப்பத சாத்திய மென்றறிந்து ஸ்பார்ட்டர்களெல்லோரும் மடியுமுன்னே தங்களது சவுரிய பராக்கிரமங்களை யெதிரிகளுக்குக்காட்டக் கருதி மதிலைவிட்டு வெளியேவந்து பாரசீகப் படைகளைத் தாக்கினன். தேசாபிமானமொன்று மில்லாது திரவிய வாசையினலும் பலவந்தத்தினலும் யுத்தகளத்திற்கிட்டுவரப்பட்ட சைன்னியமோ தேசாபிமானமே யுருக்கொண்ட தன்னத்தக்க இம்மகாவீரர்கள் முன் முகங்கொடுத்து நிற்பது? பார்சிகப்படைகள் அறுப்பறுப்பவன் அரிவாள்முன் விழும் தாள்கள் போலக் கூட்டம் கூட்டமாகத் தலைதரித்து விழுந்து மாண்டனராயினும் கடைசியாகச் சைன்னியப் பெருக்கத்தினல் பாரசீகர் கிரேக்கர்களின் பெரும்பான்மையோரைக் கொன்றுவிட்டனர். நடுமத்தியமானதும் பாரசீக சைன்னியம் கிரேக்கர்களை முற்றிலும் சூழ்ந்துகொண்டது. இவ்வாறு அந்தி வரையினும் ஸ்பார்ட்டர்கள் எதிரிகளோடு சண்டைசெய்து ஈட்டியுங்கையுமாக யுத்தகளத்தில் மாண்டனர். சூரியாஸ்தமனமானது மொரு ஸ்பார்ட்டன் கூடவுயிரோடிருந்தானென்றில்லை.

நாடிழந்த ஸ்பார்ட்டமன்னனைப்பார்த்து மகாவரசன் இவர்கள் போலின்னு மனேகர்கள் ஸ்பார்ட்டாவிலுண்டோ வென்று வினவ, எண்ணுயிரம் பெயர் போலுமுண்டெனவும், அவன் உள்ம் நடுங்கி தேகம் மயிர்க்குச்செடுத்திருக்கவேண்டும். இத்தீரர்களுடைய பராக்கிரமமானதுபாரசீகசைன்னிய முழுவதையும் நடுக்குறச்செய்தது. இப்படி நடுக்குற்ற பாரசீகர் கணவாயைக் கடந்து கரேக்கநாட்டையடைந்தும் முடிவில் முறியடிக்கப்பெற்றுத் துரத்தப்பட்டார்களென்று சொல்லவும் வேண்டுமோ!

ஸ்பார்ட்டாவில் இச்சுத்தவீரர்களுடைய பிரதாபஸ்மரணையின் பொருட்டுப் பளிங்கு ஸ்தம்பங்களை நிறுத்தி லியானிடாஸ் முதலிய வொவ்வொருவீரருடைய பெயரும் யுத்தவரலாறுகளுடன் ஸ்தம்பங்களில்வரையக், கவிகளிவரது சவுரியத்தைப் புகழ்ந்துபாடினர். இவ்விருத்தாந்தங்கள் நடந்து சுமார் இரண்டாயிரத்துநானூறு வருஷகால மாகியும், படைச்செருக்கினல் அக்கிரமமாக எளியவர்கள்மீது போர்நடத்துவோரை யெதிர்ப்பதில் தேசாபிமானிகளுக்கு லியானிடாவின் நாமஸ்மரணையானது ஓர் மந்திரம்போலின்றைக்கு மிருந்துகொண்டு வருகின்றது.

## THE NEW BRITISH CABINET.

### புதிய மந்திராலோசனை சபை.

மிஸ்டர் அஸ்குவித்-பிரதான மந்திரி
லார்ட் லான்ஸ்டௌன்-பொது
ஸர் எஸ். பக்மாஸ்டர்-லார்ட்சான்ஸலர்
லார்ட் க்ரூ கௌன்ஸில் ப்ரெஸிடெண்ட்
லார்ட்கர்ஸன்-லார்ட் ப்ரிவிஸீல்
மிஸ்டர் மக்கென்ன-அரசிறை மந்திரி
ஸர்ஜான் ஸைமன்-உள்நாட்டு மந்திரி
ஸர் எட்வர்ட் க்ரே-புறதேசமந்திரி
மிஸ்டர் போனர் லா-குடியேற்றநாட்டு மந்திரி
மிஸ்டர் சாம்பர்லேன்-இந்தியா மந்திரி
லார்ட் கிட்சனர்-யுத்தமந்திரி
மிஸ்டர் லாய்ட் ஜார்ஜ்-யுத்ததளவாட மந்திரி
மிஸ்டர் பால்போர்-கப்பற் சைனிய மந்திரி
மிஸ்டர் ரன்ஸிமான்-வர்த்தக மந்திரி
மிஸ்டர் லாங்-லோகல்போர்டு மந்திரி
மிஸ்டர் சர்ச்சில்-லங்காஸ்டர் மந்திரி
மிஸ்டர் பிர்ரெல்-ஐர்லாந்து மந்திரி
மிஸ்டர் வுட்-ஸ்காட்லாந்து மந்திரி
லார்ட் ஸெல்போர்ன்-வியவசாயமந்திரி
மிஸ்டர் ஹார்கோர்ட்-மராமத்து மந்திரி
மிஸ்டர் ஹெண்டர்ஸன்-வித்யா மந்திரி
ஸர்எட்வர்ட் கார்ஸன்-அட்டர்ணி ஜனரல்

## PROVERBS AS AIDS TO CHILD STUDY.

## பாலபோத சிக்ஷாசாதனம்:
## பழமொழி விளக்கம்.

### அற்பகுணம்.

1. காற்றுக்கு எதிரில் துப்பினால் முகத்தில் விழும்.

ஒருவன் அற்பன் என்பது நமக்கு நிச்சயமாய்த் தெரிந்திருக்க அவனுக்கு நாம் ஏதாவது ஓர்வித அவமானம் செய்ய எத்தனித்தால் அது நம்மையே சூழ்ந்துகொண்டு நமக்கு அதிக அவமானத்தை விளைவிக்கும் என்பதாம். எதிர்காற்று தூசுகளை நம்மேல் வாரியிறைப்பது நமக்குத் தெரிந்திருக்க அக்காற்றின் எதிராக நாம் துப்பினால் துப்பும் எச்சில் நம்மேல் விழாமல் மற்றெவ்விடத்தில் விழும் என்று நாம் கருதலாம்! அவசியம் நம்மேலேயே விழும். ஆகையால் அதை நன்றாக அறிந்திருக்கும் நாம் அவ்வாறு ஒருபொழுதும் செய்யக்கூடாது. அதுபோலவே துஷ்டர் குணத்தை அறிந்த நாம் அவர்களுடன் சிணுக்கக்கூடாது! என்பது கருத்து.

2. குதிரையின் குணமறிந்தல்லவோ தம்பிரான் கொம்பு கொடுக்கவில்லை.

அற்பன் குணமறிந்து அதற்கேற்றபடி நடக்கவேண்டும். ஓர் பிரபுவினிடம் ஓர் துஷ்டக் குதிரையிருந்தது. அதில் ஓர் மனிதன் ஸவாரி செய்ய ஏறியுட்கார்ந்தால் அது வெகு வேகமாய் ஓடும். ஸவாரி செய்கிறவன் கையில் கோலிருக்கக் கண்டால் வெகு விரைவாகச் சென்று தன்மேல் ஏறியிருக்கின்றவனைத் தள்ளிவிடும். இக்குணத்தை உத்தேசித்துத்தான் தம்பிரான் கொம்பு கொடுக்கவில்லை. அற்பர்கள் குணந்தெரிந்து நடந்துகொள்ள வேண்டும் என்றபடி.

3. குதிரை ஏறினென்ன! கோணக்கொம்பு ஊதி என்ன! வீணர்க்கும் கீர்த்திக்கும் வெகுதூரம்.

வீணர்கள் அதாவது அற்பர்கள் எப்பொழுதும் குணத்தால் அற்பர்களேயன்றி வேறல்லர். ஆகையால் அவர்கள் என்னதான் உயர்ந்த பதவிக்கு வந்த போதிலும் மற்றவர்களுக்கு அதனால் ஓர்வித குணமுமில்லை என்பது கருத்து. கோணக்கொம்பு என்பது உயர்ந்த பதவிக்கு ஒருவன் வரும்பொழுது அவன் பதவி உயர்ந்த பதவி என்பதை எல்லோருக்கும் விளங்கச் செய்ய ஊதப்படும் ஓர் ராஜமரியாதை. அவ்வாறு உயர்ந்த பதவிக்கு ஒருவன் வரும்பொழுது அவன் குதிரை ஏறி ஸவாரி செய்யும் உத்தரவையும் பெறுவான். அவ்வாறு அவன் குதிரை ஏறிச் செல்லும்பொழுது அவன் வரவை எல்லாருக்கும் தெரியப்படுத்த கோணக்கொம்பு ஊதப்படும். என்னதானிருந்தென்ன அவனால் ஒருவருக்கும் ஓர்வித பிரயோசனமுமிருக்கமாட்டாது என்பதாம்.

4. குறைகுடம் ததும்பும் நிறைகுடம் ததும்பாது.

இதற்கு நேரான பழமொழி "அறைகுடம் ததும்பும் நிறைகுடம் ததும்பாது" என்பதாம். இதன் அருத்தம் வெகு சுலபம். அற்பன் எப்படியும் படாடோபம் செய்வான்தான். நிறைகுணமுடையோன் தன்னிலடங்கி அமர்ந்திருப்பான்.

5. கோட்டிக்கோட்டி அளந்தாலும் குருணி பதக்காகாது.

6. குருணி மை தானிட்டாலும் குருடு குருடே.

ஒருவனுக்கு இயற்கையாக அற்பகுணம் ஏற்பட்ட பிறகு என்னதான் முயன்றாலும் அதை மாற்றலரிது என்பதாம். இப்பழமொழிகளை விதித்தபடியே நடக்குமேயல்லாது அதற்கு அதிகமாய் நடக்காது என்பதற்கும் இசைந்த பழமொழிகளாகவும் கூறுவது வழக்கம். அவ்வாறே அற்பகுணத்துக்கும் ஒருவாறு இசைந்த பழமொழிகளாகையாலிங்கு எடுத்து உதகரிக்கப்பட்டன.

7. சீவரத்து பார்ப்பான் இருந்தும் கெடுத்தான், செத்தும் கெடுத்தான்.

அற்பர்களால் எப்பொழுதும் விளைவது துன்பம் என்பதைச் சொல்லும் மூதுரை.

காஞ்சீபுரத்துக்குச் சமீபத்தில் சீவரம் என்ற ஓர் ஊர் பாலாற்றுக்கரையில் இருக்கின்றது. அவ்வூரில் ஓர் வேதியன் சுமார் 200-வரு

ஷங்களுக்குமுந்தி வசித்துக்கொண்டிருந்தான். அவன் ஏதோ ஒரு காரணத்தால் மதமிழந்து பறையர்கள் கூட்டத்தில் சேர்ந்தான். முதலில் சேர்ந்தான் என்றாலும் பிறகு அக்காலத்திலிருந்த பற்பல ஜாதிக்கட்டால் பறையர்களும் அவனை ஒப்புக்கொள்ளாமல் தள்ளிவிட்டார்கள். வேதியர்கள் அவனை மறுபடி யேற்றுக்கொள்ளவோ வழியில்லை. ஆகையால் இருவகையிலும் அவன் கெட்டு ஒருவரும் அதிகமாய் அணுகாத ஆற்றங்கரையோரம் தேடி அவ்விடம் குடிசை கட்டிக்கொண்டு தனது காலத்தைக் கழித்துவந்தான். என்றாலும் அக்காலத்து வழக்கப்படி ஒருவரும் அவனுக்குஉபகாரம்செய்ய வழியில்லாமலிருந்தது. இவ்வாறுகொஞ்சநாளிருந்துவிட்டு அவன் மாண்டான். அவனை யார் எடுத்து தகனம் செய்கிறது அல்லது குழியிலடக்கம் செய்கிறது? அந்தணர்களும் 'மாட்டோம்' என்றார்கள், பறையர்களும் 'மாட்டோம்' என்றார்கள். வெகு சிரமப்பட்டு அயலூரிலிருந்து அதிக பணம் கொடுத்து குறவன் ஒருவனை அழைத்துவந்து பிரேதத்தை அடக்கஞ் செய்தார்கள். ஆகையால் அவன் இருந்தும் கெடுத்தான் செத்தும் கெடுத்தான் என்ற பழமொழி வழக்கத்தில் வந்தது. அற்பகுணத்தால் அச்சீவரத்துப் பார்ப்பான் அவ்வாறு இருவிதமாய் உபத்திரவம் உண்டாக்கினபடியால் அற்பர்கள் குணம் அவ்வாறென்பதை இப்பழமொழி விளங்கச் செய்கின்றது.

8. தனக்கு மூக்குப்போனாலும் எதிரிக்கு சகுனப்பிழை வேண்டும்.

அற்பர்களுடைய சுபாவத்தை உள்ளது உள்ளபடி காட்டும் உண்மையான மூதுரை. ஓர் மனிதன் ஏதாவது நற்காரியத்தை உத்தேசித்து புறப்படும்பொழுது மூக்குப்போன மற்றொருவன் எதிரில் வரக்கண்டால் அது அவனுக்கு அபசகுனம். தான் போகும் காரியம் கைகூடாதென்பதற்கு ஓர் அடையாளம். அற்பர்கள் அவ்வாறு மற்றவர்களுடைய காரியத்தை நாசம்பண்ண ஏதாவது தங்களையும் ஓர்வித சங்கடத்தில் அமைத்துக்கொள்ளவேண்டியிருந்தாலும் அப்படியே செய்துகொள்ளுவார்கள் என்றபடி.

9. நடு ஊரில் நச்சுமரம் பழுத்தென்ன.

ஓர்வித பிரயோசனமு மில்லை. அதுமட்டுமல்ல. நச்சுப்பழத்தால் தீமையையும் விளைவிக்கும். அதுபோல் அற்பனுக்கு ஐசுவரியம் வந்தால் என்னலாபம்! ஒருக்கால் பணச்செருக்கால் கொடியவனுகித் தீங்கிழைப்பான்.

10. நரிகொழுத்தென்ன காஞ்சிரம் பழுத்தென்ன.

நிஷ்பிரயோஜனம்: தீமையையே விளைவிக்கும். அடுத்த பழமொழியிலும் விவரிக்கப்படும்.

11. நரிக்குப் பெரியதனம் கொடுத்தால் கிடைக்கு இரண்டாடுகேட்கும்.

நரியை எப்பொழுதும் அற்பவிலங்குகளுக்குள் ஒன்றாகச்சேர்ப்பது வழக்கம். தந்திரமுள்ளதுமாம். இவ்விடத்தில் அதனுடைய அற்பகுணத்தையே நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். அற்பனுக்கு பெரிய அதிகாரம் கொடுப்போமேயானல் அவன் நியாயம் என்பதைவிட்டு விலகி அவ்வதிகாரத்தை எவ்வாறு செலுத்தினல் தீமையே அதிகமாக விளையுமோ அவ்வாறு செலுத்துவான் என்பது இம்மூதுரையின் தாற்பரியம். ஆகையால் அற்பனுக்கு அதிகாரம் கொடுக்கக்கூடாதென்பது கருத்து.

12. நாறல்மீனை பூனை பார்ப்பதுபோல.

அற்பர்களுக்கு அற்பவிஷயங்களில் கொண்டாட்டம். நாறுத புது மீனும் தூரத்தில் எடுத்துவரப்படும்பொழுதே கவிச்சு வீசும். நாறல் மீனுக்கு கவிச்சுசொல்லவும் வேண்டுமா. அப்படியிருந்தபோதிலும் அதைப்பார்க்கப் பூனைக்குக்கொண்டாட்டம். அற்பர்களுக்கு அற்பவிஷயங்களில் அதிக ஆசை என்பது கருத்து.

13. நாறல் சாணியை மிதிப்பானேன் நல்ல தண்ணீர்வார்த்துக் கழுவுவானேன்.

அற்பர்களுடன் பலாத்காரமாய் சகவாசம் பண்ணி அதனுல் வந்த அவமானத்தை நீக்க நம்மிடமிருக்கும் நற்பதார்த்தங்களை இழப்பானேன். முதலிலேயே சகவாசம் பண்ணுமலி

ருந்தால் பின்பு இவ்வித நஷ்டம் நமக்கு சம்பவிக்காது என்றபடி.

14. நாற்றச் சோற்றுக்கு பதம் பார்ப்பானேன்.

முதலிலேயே ஒருவன் குணம் அற்பமென்று ஏற்பட்டபிறகு அது அற்பமா இல்லையா என்று பரிசோதித்துப் பார்க்க நாம் முயல்வது தெரியாத தனம்—என்று சொன்னபடி. நாறல் சோறு என்று ஏற்கனவே ஏற்பட்டபிறகு அதை பதம்பார்த்து அப்படியே நாறல்சோறு இல்லையா என்று தெரிந்துகொள்ள யாராவது பிரயத்தனப்படுவார்களா!

15. நாற்கலக்கூழுக்கு நானே அதிகாரி.

அற்பன் தான் அடைந்திருக்கும் அற்பசம்பத்தைக்கண்டு ஆனந்தபரவசனுய் அவ்விஷயமாய் செலுத்தவேண்டிய அதிகாரம் அவ்வளவையும் செலுத்துவான் என்றபடி.

கூழ் போஜனங்களுக்குள் வெகு தாழ்மையான உணவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றது. அக்கூழில் நாற்கலம் ஒரு அற்பனுக்குக் கிட்டினுல் அதனுல் அவன் விபவம் என்ன அதிகரித்ததாக எண்ணலாம். ஆனுல் அவ்வற்பனுக்கு ஏதோ மகத்தான ஐசுவரியம் கைகூடினதாகத் தோன்றும்.

அப்பாக்கியத்தையடைந்த நிமித்தம் அவன் எவ்வளவு அதிகாரம் செலுத்தலாமோ அவ்வளவும் செலுத்துவான்.

இம்முதுரையின் தாற்பரியம் ஓர் அற்பனுக்கு ஏதாவது அற்பவஸ்து கிட்டினபோதிலும் அதனுல் அகம்பாவமடைவான் என்றபடி

16. நிலத்திற்குத் தகுந்த களையும் குலத்திற்குத் தகுந்த குணமும்.

அதுபோல அற்பனுக்குத் தகுந்தபுத்திதானிருக்கும் என்றபடி.

17. நீண்டபுல் நிற்க நிழலாமா.

அவ்வாறு அற்பன் உயர் பதவியடைந்தபோதிலும் ஒருவருக்கும் பிரயோசனப்படமாட்டான்.

18. பனிபெய்து கடல் நிரம்புமா.

19. பனிபெய்து குளம் நிரம்புமா.

20. பனிப்பெருக்கிலே கப்பல் ஓட்டலாமா.

21. பனியைநம்பி ஏர்பூட்டினதுபோல.

எல்லாம் ஒரே அருத்தம். அற்பன் உதவியை நம்பி ஓர் காரியம் நாம் ஆரம்பிக்கலாகாது.

22. பாடிப்பாடிக்குத்தினுலும் பதரில் அரிசியில்லை.

அவ்வாறு என்னதான் அற்பனை நாம் புகழ்ந்து பேசி தோத்திரங்கள் பண்ணி அவனிடமிருந்து ஏதாவது ஓர்வித லாபமடைய முயன்றுலும் நமக்கொன்றும் கிட்டாது. வீண் வாய் சிரமமே ஒழிய மற்றோர்வித பிரயோசனமுமில்லை.

23. பிடாரி வரங்கொடுத்தாலும் ஓச்சன் வரங்கொடுத்தலரிது.

ஓச்சன் அப்பிடாரியின் மந்திரியாய் ஏற்பட்டபடியால் அவன் அற்ப தனம் தனக்கு லாபமில்லாமல் வரங்கொடுக்க மனம் வராது. கடைசியாய் ஓச்சன் தானுய்க்கொடுப்பது ஒன்றுமில்லை. பிடாரி அளித்த வரத்தை தான் அவ்வாறு அளித்ததாக சொல்லவேண்டியது ஒன்றுதான். அதற்கும் அவன் மனம் வருகிறதில்லை என்றபடி. அற்பர்களுடைய இயற்கை யித்தன்மையது என்று அறிந்துகொள்ளவந்த பழமொழி யிது.

24. புழுக்கை கலம்கழுவித் தின்னுது.

25. பித்தளை நாற்றமறியாது.

ஏன்! புழுக்கைக்கு சுபாவமே எச்சிலை தின்பது. பித்தளையின் குணமே எப்பொழுதும் அழுக்காக இருப்பது. இவ்வாறு இயல்பாக ஏற்பட்டிருக்க இவர்கள் சுபாவத்தைவிட்டு எப்படி மீறி நடப்பார்கள். அற்பர்கள் தங்கள் அற்பகுணத்தை ஒருபொழுதும் விட்டு பெருந்தோரணையாக நடக்கார்கள் என்றபடி.

26. புழுக்கைப்புத்தி பிடரியிலே.

அற்பனுக்கு எப்பொழுதும் அற்ப புத்தியே யிருக்குமே யல்லாது நற்புத்தி யிருக்காது

என்றபடி. ஓர் வேலைக்காரன் தனது பிடரியில் தடி யொன்றை இரு தோட்களிலும் வியாபிக்க வைத்துக்கொண்டு தனது வீட்டுக்குள் நுழைய தடி அவனை உள்ளே நுழையவொட்டாமல் தடுத்தது. ஏதோ தடையொன்று உண்டானதைமட்டுமவன் அறிந்தானே யன்றி இன்ன காரணத்தால் உண்டாயிற்றென்பதை அவன் அறிந்துகொள்ளவில்லை. வீதியிலிருந்த ஒரு புத்திமான் ஓடிவந்து அப்புழுக்கையின் பிடரியில் ஓர் அரை வைத்து தடியை வாங்கி அவன் கையில் கொடுத்து அவன் வீட்டுக்குள் அவனை நுழையும்படிச் செய்தான்.

மூக்கிய கருத்து அற்பர்களுக்கு சில சமயத்தில் புத்தி கெட்டுப்போம் என்றபடி: அல்லது அற்ப புத்தியே மேலிட்டிருக்கும் என்று சொல்லலாம்.

27. முக்காலம் காகம் முழுகிக் குளித்தாலும் கொக்காதுமா.

அற்பர்கள் தங்கள் அற்பகுணத்தை மாற்ற என்னதான் முயன்றாலும் அக்குணம் மாறாது என்றபடி.

28. உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாதுமா.

முற்கூறிய பழமொழிக்குச்சமானம். என்னதான் உதாரமாய்ச் செலவுசெய்து அற்பன் தனது பெயரை மாற்ற எத்தனித்தாலும் அவனுக்கு ஏற்கனவே வந்த கெட்ட பெயர் போகாது என்றபடி.

இதற்கு ஓர் சிறுகதை யுண்டு. அற்பனொருவன் கப்பல் வியாபாரம் பண்ணி ஏகப் பணம் சம்பாதித்துவிட்டான். இவன் வெகு லோபி என்று பெயரெடுத்திருந்தனன். அதை மாற்றிக்கொள்ள 10-வாசல் வைத்து ஓர் மாளிகை கட்டி அதன் நடுவே உட்கார்ந்துகொண்டு 'எந்த வாசல் வழியாக யார் வந்து கேட்டாலும் பொருள் கொடுக்கிறது' என்ற விரதம் வைத்துச்கொண்டான். கொஞ்சகா லிவ்விரதம் நடந்துவந்தது. இப்படியிருக்க ஒருநாள் ஓர் சன்னியாசி முதல்வாசல் வழியாக வந்து ஒரு ரூபாய் கேட்டார். அவ்வற்பன் கொடுத்தான். மறுபடி அச்சன்னியாசி இரண்டாவது வாசல் வழியே வந்து இரண்டு ரூபா கேட்டார். அத்தொகையையுங் கொடுத்தான். மூன்றாவது வாசல் வழியாகவந்து மூன்று ரூபா, நான்காவது வாசல் வழியாக வந்து நான்கு ரூபா. இம்மாதிரி இவர் கேட்டுவந்தார். அவர் 10-வது வாசல் வழியாகவந்து 10-ரூபாயும் கேட்டார். அவ்வளவையும் அந்த உலோபி சகித்துக்கொண்டு கொடுத்தான். 10-வாசற்களும் முடிந்தவுடன் இரண்டாந்தடவை அச்சன்னியாசி முதல்வாசல் வழியாக வந்து ஓர் ரூபா மறுபடியும் கேட்கலுற்றார். உலோபிக்கு வந்த கோபத்திற்கு அளவேயில்லை. "சேய்! நீர் சன்னியாசியல்ல. சன்னியாசி என்ற பதத்திற்கு உனக்கு அருத்தம் தெரியுமா. என்ன ஆசை!" என்று நிந்தித்தான். உடனே அந்தப் பெரியவரும் "ஐயா நீங்கள் தாதாவுமல்ல! இதோபாரும் உமதுபொருள்!" என்று சொல்லி தனக்கு அதுவரையில் கிட்டின 55-ரூபாயையும் அவ்வற்பன் காலில் கொட்டினார். ஏதோ எல்லாருக்கும் தாதா என்றபட்டம் வந்துவிடும் என்று எண்ணவேண்டாம்: அதைப்போக்கத்தான் நானிங்குவந்தேன். 10-வாசல் களைக்கட்டி தானம் கொடுப்பதாக தீட்சித்துக் கொண்டு உட்கார்ந்த உமக்கு கோபம் ஏன் வந்தது! கேட்டதைக் கொடுக்க சித்தமாயிருக்கின்றேன் என்று ஏன் நீர் விருது கூறிக் கொண்டீர்! என்று சிரித்தார். அந்த உலோபி என்னதான் வேண்டிக்கொண்டும் அச்சன்னியாசி அப்பணத்தை விரலால்கூடத் தொடவில்லை. அற்பன் வெட்கிப்போனான்.

ஆகையால் எவ்வளவு சிரமப்பட்டாலும் அற்பன் உதாரனாவது முடியாது. அவனற்ப குணம் அவனை விட்டு ஒருநாளும் போகாது.

## A BRIEF SKETCH OF THE HISTORY OF INDIA.

## இந்துதேச சரித்திர ஏலப்பாட்டு.

### INVOCATION.

காப்பு.

(1.)
மன்னியசீர் வளர்ந்திடும்நம் - நாட்டின்
மகத்துவம்சேர் சரித்திரத்தைப்
பன்னநல்ல சுவைமிகுந்த - ஏலப்
பாட்டதனிற் பகர்வதற்கு

முடுகு.

1. கன்னிவளர்பங்கனுக் கரியதிரு மைந்தன்
கஜவதனனருள் பெருகு மிறையேக தந்தன்
கணநாதனேங்கரன் குணமேரு ஆதி
கருதுமவர்மலவிருட் கொருஞான ஜோதி.

2. அன்னையொடுதந்தையா யகிலமும் அளிப்போன்
அன்பருளமென்னுமல ரின்மிசை களிப்போன்
ஆகுவாகனனரிய தோகைமயில் ஊரும்
அற்புதன்முன்வந்த சொற்பெருமை சேரும்.

3. தன்னைநிகரில்லாத ஷாட்குண்ய தீபன்
சாற்றும்மின் மலசச்சி தானந்த ரூபன்
சதுர்மறைகள்தேடரிய பரிபூரண வள்ளல்
சரணாரவிந்தத்தை நினைவோர்கள் உள்ளில்.

4. துன்னிவளர்கின்றவருள் மன்னிநிறை வாரி
தோற்றமழிவில்லாத சுயஞ்சோதி காரி
தூய்மையொடுஞானநெறி மேயவர்கள் பணியும்
சுந்தரம்சேர்பாதார விந்தமென்றும் துணையே
—ஏலேலோ ராமஜயம்.

### THE HINDU RULE.

### I. இந்து அரசாட்சி.

(2.)
அந்தமுடன் ஆரியர்கள் - ஆண்ட
அதிசயத்தை அமைவுடனே
முந்தமுந்தத் தெரிந்திடநீ - மானே
மொழிகுவேன்கேள் அழகுடனே.

முடுகு.

1. சிந்துநதிதீரத்தில் வந்துகுடி ஏறிச்
செப்புமுயர்வேதங்கள் மெய்ப்படத் தேறிச்

சில்காலம் அயர்வின்றி நலமா இருந்தார்
சென்றுபின் அந்நதி கடக்கத் திருந்தார்.

2. கந்தடுகளிற்றினுக் கிணையாக நின்று
கறுவோடுபோர்செய்ய வெருவாமல் வென்று
கனமானராஜ்யங்கள் இனமாச் சமைத்தார்
கற்பகநல்நாடுபோற் பொற்புற அமைத்தார்.

3. சந்திராதித்தர்தம் சந்ததி உதித்துத்
தலையானபலவேந்தர் நிலையாக் கதித்துச்
சலியாதபுகழ்பெற்ற மநுவாதி மன்னர்
தரமாகப்பலகாலம் முறைசெய்த பின்னர்,

4. பந்தமொடுபல்வேந்தர் அந்தமோ டாண்டார்
பண்பாக ஸ்ரீராமர் நண்போடே ஆண்டார்
பகரரியபலராமர் ஸ்ரீகிருஷ்ணர் ஆண்டார்
பஞ்சபாண்டவர்களும் பரிவாக ஆண்டார்.

5. நிந்தையறுசந்த்ரகுப் தனையாதி மன்னர்
நீதியொடுபலகாலம் முறைசெய்த பின்னர்
நெடியபுகழ்பெருவிக்ர மாதித்த னோடு
நிலவுபலராஜபுத் திரர் இந்த நாடு,

6. நந்தலறவேநெடுங் காலங்கள் ஆண்டார்
நலனுற்றசாலிவா கனனுமிக ஆண்டான்
நண்ணரியபுகழ்பெற்ற எண்ணரிய வீரர்
நலியாதசோழபாண் டியரோடு சேரர்,

7. விந்தையொடுபலகாலம் மெலியாமல் ஆண்டார்
வேதநெறிநீதிதவ றாதுபுகழ் பூண்டார்
மித்மாகவேஆறி லொருகூறு கொண்டு
மெலியோரைவலியோர்கள் நலியாது கண்டு.

8. புந்திமகிழ்வாகவோர் துறையிற் பொருந்தி
புலியோடுபசுநின்று நறுநீர் அருந்தப்
புண்யங்கள்யாவுமிப் புவிமீதில் ஓங்கப்
புகல்கின்றபாவவினை மருவாமல் நீங்க,

—ஏலேலோ ராமஜயப்.

## THE MAHOMEDAN RULE.

## II. மகம்மதிய அரசாட்சி.

(3.) செம்மையொடு மகம்மதியர் - இந்தத்
தேசமெல்லாம் ஜயித்ததுவும்
பொம்மலுடன் புரந்ததுவும் - யாவும்
புகலுவேன்கேள் இனியுனக்கே.

முடுகு.

1. நம்மவர்களாம்இந்து ராஜாக்கள்    உள்ளில்
நட்பின்றியொருவரோ டொருவர்பகை    கொள்ள
நாடியதுகண்டுமக மத்கோரி    யென்னும்
ரணசூரனனாப் கான்தேச    மன்னன்.

2. இம்மேமனவெழுந்துவந் தெதிர்பொருத    வேந்தர்
எல்லோரையும்வென்று வல்லாண்மை    வாய்ந்து
இயலாகவேதுருக் கர்க்கரசு    தந்தான்
இணையற்றபலமன்னர் அவன்வழியில்    வந்தார்.

3. வெம்மையுறும்அவர்களில் விளங்கும்    பிரதாபம்
மிக்கானபேர்கள்சிலர் மற்றோர்கள்    லோபம்
மேவிவருதுர்க்குணக் கட்டியவர்    தொல்லை
வெய்யதுயர்செய்ததற் கெல்லை    யொன்றில்லை.

4. தம்மதம்வளர்த்திடப் புன்மதியி    லோர்ந்து
சதிரானகோயில்கள் தகர்த்தருள்    தீர்ந்து
சங்கடம்பலசெய்து தரணியிருள்    மூடத்
தளர்வுசெய்தார்பின்பு தாமவர்கள்    வீடக்.

5. கும்மும்இருள்நீக்கவரு நன்மையுரு    ஜோதி
குலவவந்தார்கள்மொக லாயரெனும்    நீதி
குறையாதமன்னரவர் முறையில்    உத்துங்கன்
கொடியரசர்அடிபணிந் திடும்    ராஜசிங்கம்.

6. எம்மையுறும்அக்பரெனும் நன்மையுறு    பேரோன்
எல்லார்க்கும்நல்லான் எனத்திகழும்    சீரோன்
ஏதமறுபுவிராஜ நட்சத்தி    ரங்கட்
கிடையிலொளிமிகின்ற வடிவுடைய    திங்கள்.

7. சம்மதமதாகவே யெம்மதமும்    கொண்ட
தக்கோன்அவன்போன பின்னுமொரு    மண்டு
சனிபோல்முளைத்தார்கள் தரணியிருள்    கொள்ளத்
தம்முடைமைதன்னையும் காக்கவலி    யில்லார்.

8. நன்மையுறவிவர்குடிகள் எவ்வாறு    காப்பார்
நலியவந்திடுதுயரம் எவ்வாறு    தீர்ப்பார்
நாசமாகியதிந்தத் தேசங்க    ளெங்கும்
நண்ணியதுமுன்னமென்று மில்லாத    பங்கம்

—ஏலேலோ ராமஜயம்.

(இன்னும் வரும்.)

## "ON THE EXCELLENCE OF TEMPLE WORSHIP."

## "ஆலயந்தொழுவது சாலவுநன்று."*

### கடவுள் வணக்கம்.

*தாதையாய்த் தாயாய், தந்தைசற்குருவாய் சராசர மனைத்துமாம்பொருளாய்*
*ஆதியாய் நடுவாய் யந்தமாய்ப் பந்தம் யாவுமற்றகம் புற நிறைந்த*
*சோதியாய்ச் சுடராய் தூயநான்மறையாய்ச் சுகந்தரு மின்பவாரிதியாய்*
*நீதியாய் யழியா நித்யமூர்த்தியுமாய் நிற்குநின் னடி வணங்குதுமே.*

*ஊனுயு முயிராயு முடலாயு முலகாயு மூதித்துத்தோன் றிக்*
*கானுயு மலையாயுங் கடலாயு நிலனுயுங் கருதுவோர்க் குத்*
*தேனுயும் பாலாயுந் தெவிட்டாத வமிழ்தாயுஞ் சிறந்த யாவுந்*
*தானுயுநின்ற வன்றன் றண்கழலைச் சந்ததமுந் தலை மேற் கொள்வாம்.*

### அகவல்.

மேலவர்தம்முன் விரும்பியே நின்று
பாலியந்தன்னிற் கல்வியைப் பயின்று
மூலகாரணமாம் மூர்த்தியே யென்று
ஆலயந்தொழுவது சாலவு நன்று.

சமுத்திரம் ஜலதாரைநீரையும் தன்னின மாகச் சேர்த்துக்கொள்வதுபோலும் மாதா பிதாக்கள் மழலைச்சொற்கேட்டு மகிழ்வது போலும், இவ்வுபந்நியாசத்திலுள்ள குற்றங் களை நீக்கி குணத்தையே கொள்வது இச் சபையிலுள்ள மேலோர் கடமை.

ஆவின் உடல் முற்றிலும் பால்பரவியிருப் பினும் அப்பசுவின் மடியிற் கன்றைக்கொண்டு கறந்துகொள்வதுபோல் சுயம்புவாய் எங்கும், என்றும், சொரூபமாயும் அரூபமாயும் இரண் டற்றதாயும் நிறைந்து விளங்கும் பிரமமானது மலரின் மணமாயும் எள்ளில் எண்ணெயாயும் ஆலயங்களிற் றெய்வ மூர்த்தியாயும் எழுந் தருளி யிருக்கின்றமையால் ஒவ்வொருவரும் தம் தமக்குரிய ஆலயங்களிற்சென்று ஜெக தீசன் அடிகளை வணங்கிவருவதே மேலான தென்று தோன்றுகிறது.

### விஷயம்.

"ஆலயந்தொழுவது சாலவு நன்று." (பத வுரை:) ஆலயம் = கோவிலுக்குப்போய், தொழு வது = கடவுளின் அடிகளை வணங்குவது, சால வும் = மிகவும், நன்று = நல்லது.

(பொழிப்புரை.) கோவிலுக்குப்போய் கட வுளின் அடிகளை வணங்குவது மிகவும் நல்லது. (விரிவுரை): கோவிலுக்குப் போகுமுன் ஒவ் வொருவரும் தம்தம் சமயத்துக்குரியபடி ஸ்நா னம்செய்து சுத்தமான உடைதரித்து "குழந் தையும் தெய்வமும் கொண்டாடு மிடத்தில்" என்றதனல் வேண்டும் பூஜா திரவியங்களுடன் கோவிலுக்குப்போய் அகண்ட சச்சிதானந்த நித்திய பரிபூரண அனந்த கல்யாணகுண பூஷண திவ்யமங்கள ஸ்தாவரசங்கம ரூபமாய் எங்கும்நிறைந்து விளங்கும் பிரமமே அபக் குவிகள் கடைத்தேறும் பொருட்டு இவ்வால யத்தின்கண் மூர்த்திசொரூபமாய் எழுந்தருளி யிருக்கின்ற கடவுளின் திருப்பாதங்களை மனோ வாக்குக் காயங்களினுலும்,பயபக்தி விஸ்வாசத் துடனும், உடல், பொருள், ஆவி மூன்றும் தத்தம்செய்து திரிகரணசுத்தியாய் முக்கால மும் வாழ்நாள் பரியந்தம் எக்காலமும் வண ங்கிவருதல் நல்லபதவியை அளிக்கும். யாவ ரும் முதன்மையில் விரும்புதலும் இதுவே பெரும்பான்மையோர் வழக்கத்தில் சரியை முதற்படியாய் இருக்கின்றமையால், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பதவி யையும் பெறுவதற்கு ஆலயங்களிற்சென்று கடவுளைவணங்குவதே தெய்வபக்தி பெருகி எளிதில் அஞ்ஞானம்நீங்கி மெஞ்ஞானத்தை

* Substance of a lecture delivered before a Teacher's Association.

யுணர்வதற்கு உத்தமமான மார்க்கமாயிருக்கின்றது. ஆனதால் ஔவையாரும் ஆலயந்தொழுவது சாலவுநன்றென்றனர். ஏன் ஆலயங்களில்போய் கடவுளை வணங்கவேவண்டுமெனில், (கைவல்லியம்)

"தாலத்தின்மரங்கள்காட்டி தனிப்பிறைகாட்டுவார்போல்
ஆலத்தின் உடுக்கள்காட்டி அருந்ததிகாட்டுவார்போல்
தூலத்தைமுன்புகாட்டி சூக்குமசொரூபமான
மூலத்தைப்பின்புகாட்ட முனிவரர்தொடங்கினரே."

என்றும், (குறள்) "கற்றதனாலாயபயனென் கொல், வாலறிவனற்றாள்தொழா ரெனில்."—"இருள் சேரிருவினையுஞ் சேராவிறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார்மாட்டு."—"அறவாழியந்தணன்றாள் சேர்ந்தார்க் கல்லாற் பிறவாழி நீந்தலரிது."—"கோளிற் பொறியிற்குணமிலவே யெண்குணத்தான்றாளை வணங்காத்தலை."—என்று திருவள்ளுவநாயனாரும் கூறியிருக்கின்றார்.

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறைபாய்த் தொடங்கினர்க்குவார்த்தைசொல்லசற்குருவும் வாய்க்கும் பராபரமே."—"விரும்புஞ்சரியை முதன் மெஞ்ஞானநான்கும் அரும்புமலர் காய்கனிகளன்றோ பராபரமே."—என்று தாயுமானவரும் சொல்லுகின்றனர். இன்னும் பக்தசேவடிகளும், மார்க்கண்டேயர், அறுபத்துமூவர்கள், மாணிக்கவாசகர்முதலிய ஏனையர்களும் கற்பணி, பொற்பணி, சொற்பணிமுதலிய பலவித உபசாரகைங்கரியத்தினால் ஆலயந்தோறுஞ்சென்று தொண்டுபுரிந்தே முக்திபெற்றிருக்கின்றனர். அவ்வாறு முக்திபெற்றிருக்கின்றவர்களில் எளிதில் வீடடைந்தவரும் மிகவும் சாரமாயுள்ளதும் பெரிய புராணத்தில் உள்ளதுமான திருநாளைப்போவா ரென்னும் நந்தனார் சரித்திரத்தை யான் தெரிந்தவரையில் சொல்லக்கேண்மின்.

கடல்சூழ்ந்து நிலவளம், நீர்வளம், குடிவளமமைந்து சிறப்புற்றோங்கிய சோளதேசத்தின்கண், மேற்கானாடென்னும் ஆதனூர் பறச்சேரியில் நீசர்குலத்தில் சிப்பியில் முத்துண்டானதுபோலும் சேற்றிற் செந்தாமரை உற்பவித்ததுபோலும் நந்தனார் என்பவர் பிறந்தார். அவர் அவ்வூர் வெட்டிமைத் தொழிலையும் 40-வேலி பூமியுடைய அவ்வூர் வேதியருக்கு அடிமையாளாயிருந்து விவசாயமும் செய்து வந்தனர். இவர் சிலர் கோயிலுக்குப்போய் சுவாமி தரிசனஞ்செய்து வருபவரைப்பார்த்தும் அவர் சொல்லக்கேட்டும் அவ்வாறு இவரும் செய்துவர ஆவல்கொண்டு சமீபமுள்ள திருப்புன்கூர் ஆலயத்திற்குச்சென்று ஊர்வலம் வந்தனர். தான் நீசஜன்மமானதால் கோவிற்குள் செல்லாமல் சன்னிதிமுன் தூரநின்று தலைவணங்கியும் ஆடியும் பாடியும் மனமுருகிப் பன்முறை துதித்தனர். நந்தியின் மறைவால் சுவாமியின் மூர்த்திகரம் தெரியவில்லை. அம்மறைவு நீங்கி தனக்குத் தரிசனம் தரும்படி ஜெகதீசனை தோத்தரித்து, ஆனந்தக்கண்ணீர் சொரிய நிற்கும் நந்தனார் மனதறிந்து நந்தியை விலகச்செய்தும் சுவாமியானவர் தமது பக்தனுக்கு தரிசனமும் தந்தருளினர். அதுமுதல் நந்தனாருக்கு பக்திபெருகி பல ஸ்தலங்களுக்கும் போய் பரமனை வணங்கியும் கோவில் மேளவாத்தியங்களுக்குத் தோலும் வாரும், யாழுக்கு நரம்பும் தேவபூஜைக்கு சுகந்த கோரோஜனையும் காணிக்கையாய்க் கொடுத்தும் ஸ்நானபானத்திற்கு உதவியாய்த் தடாகம் வெட்டியும் சிவபெருமானுக்குத் தொண்டுபுரிந்து வந்தனர். இவர் தான் முயன்ற பரமசிவ பக்தி மார்க்கத்தை தன்னினத்தாருக்கும் போதிக்க அவர்களிணங்காது மறுத்தனர். மீண்டும் அவர்கட்கு பஞ்சாக்ஷர உபதேசம் செய்தும்

† ஆகாயத்தில் (வசிஷ்டர் முதலிய தூலமான) நக்ஷத்திரங்களைக்காட்டி (சூக்ஷ்மமான) அருந்ததி நக்ஷத்திரத்தைப் (பின்னே) காட்டுவார்போல்.

சாம, பேத, தான, தண்டமென்னும் சதுர்வித உபாயத்தால் வசப்படுத்தி 12-பேர்வரையில் பார்வதி பதியை வணங்கிவரும்படிச் செய்தனர். அவர்களும் இவர் சொன்னபடியே சர்வேசனுடைய அளவிறந்த நாமங்களை தோத்தரித்தும் ஆடிப்பாடியும் தொண்டுபுரிந்து வந்தனர். இவர்கள் விஷயத்தில் செய்த நன்றிக்கும் மகிமைக்கும் உமாமகேசனே கருணைபுரிந்து வீடளிப்பவராகும். "நன்றிக்குவித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்கமென்று மிடும்பை தரும்." என்னும் குறள்படி, நந்தனரொழுக்கம், "முத்திக்குவித்தாகு முதல்வனடிதொழில் எத்திக்கும்புகழைத்தரும்." என்றதற்கிணங்க கீர்த்திபெற்றுவருங்காளில் சிலர் சிதம்பரத்தில் மார்கழி மாதத்தில்நடக்கும் ஆருத்திரா தரிசனத்திற்குப் போகிறவருடன் தானும் செல்லக்கருதி தன்னை அடிமைகொண்ட மறையோரிடஞ்சென்று உத்தரவுகேட்டனர். அவ்வந்தணர் விடைதராததனால் சிதம்பரேசனை ஸ்மரித்து மனம்வருந்தி நாளைச் சிதம்பரம் போவேனென்று சொல்லிவந்தனராதலால் "திருநாளைப்போவார்" என்னும் பெயருண்டாயிற்று. வேதியரை இவர் பலதடவைகளில் வந்து கேட்குந்தோறும் அவர் பல இம்சைகள் செய்தனரேயல்லாது விடையளித்தவரல்லர். இவர் வேதியரிடம் உத்திரவுபெற்றுச் செல்வதே ஞாயமென்று தீர்மானித்திருந்தனர். இவரிவ்வாறு 10-வருஷகாலம் "முயிற்சியுடையோர் இகழ்ச்சியடையார்" எனும் மொழிப்படி தொட்ட காரியத்தைவிடாது முயன்று தெய்வபக்தியிற் சிறந்து மெஞ்ஞானமுணர்ந்து ஊணுறக்கமுதலியதும் விட்டு, பரமன் திருவடிக்கே உடல் பொருளாவி மூன்றும் தத்தஞ்செய்து தமது வியவசாய முதலிய அடிமைத்தொழில் யாவையும் கைவிட்டனர்.

ஜெகந்நாதனுடைய திருவடியைநம்பியே யாவையும் கைவிட்ட தமது அதிதீவிரதர பக்குவியாகிய நந்தனருடைய மனமறிந்த ஸர்வ அந்தரியாமியானவர் வெகுநாள் நித்திரையே வராத நந்தனருக்கு நித்திரைவரும்படி செய்தும், சொற்பனத்தில் தரிசனந்தந்தும் எமது பக்தசிரோன்மணியே அஞ்சேலென்றருள்புரிந்தும், இன்றிரவில் நமது பூதகணங்களாலுமது வேதியருடைய கழனியாவையும் நட்டு நாளை அறுப்பறுக்கும்படி செய்தருளினோம். வேதியரிடஞ்சென்று தெரிவித்தால் விடைதருவாரென்று திருவாய்மலர்ந்தருளி தில்லைப்பெருவெளிகாட்டி மறைந்தனர். நந்தனர் கழனிகளைப்போய் பார்க்க தான் கனவிற்கண்டபடி இருக்க, களிப்புற்று தம் பிராமணரிடஞ் சென்று தெரிவிக்க, அவர் வந்து பார்த்து மகிழ்ந்தனர். நேற்று மாலைவரையில் தரிசாயிருந்த தன் 40-வேலி நஞ்சையும் இன்றறுக்கும்படி முதிர்ந்து நன்றாய் விளைந்திருக்கும் செந்நெல்லைக் கண்ணுற்றதிசயித்து நந்தனருடைய மகிமையின் அற்புதக்காட்சியை வியந்து அவர் விஷயத்தில் தான் அபராதியானதை மன்னிக்க விரும்பினர். பின்னும் அவர் நந்தனர் நோக்கி "நீர் கீழ்குலத்திற் பிறந்தும் உருத்திரமூர்த்திக்குத் தொண்டுபுரிந்தமையால் நீரே மேற்குலத்தனரானீர். யான் மேற்குலத்திற் பிறந்தும் ஈஸ்வரபக்தி யில்லாததனால் தாமரைத் தடாகத்திலுள்ள தவளையானது அம்மலரிலுள்ள தேனைப் புசியாதிருந்ததுபோல் யான் வீண் ஜென்மமானேன். காட்டிலிருக்கும் வண்டானது வந்து கஞ்சமலரிலுள்ள தேனைக் கிருகித்ததுபோல் நீர் பரமசிவபக்திரசத்தைப் புசித்து அருள்பெற்றவரானதால் யான் பரகதியடையும்வண்ணம் குருவுபதேசம் செய்யு" மென்று கேட்டனர். அதற்கு நந்தனர் தான் நீசனும், அடிமையுமானதால் செய்யத்தகாதென்று பலதரம் மறுத்தும், அவர் கேளாமல் செய்யவேண்டுமென்று வருந்தினர். ஆனால் பொதுவாய் பக

வத் பாதாரவிந்தத்தின் மகிமையையும் குணு னுபவங்களையும் நந்தனர் எடுத்துரைக்க வேதியர் கேட்டு ஆனந்தமடைந்து "நந்தனரே! இன்று உம்மகிமையைக்கண்டேன், கலிதீர்ந்தேன், ஜென்மசாபல்யமாயிற்று: நீர் சிதம்பரேசனுக்கே அடிமை, உமக்கு யானடிமை" என்று மகிழ்ந்துசொல்லி விடைதந்தனர். நந்தனரும் விடைபெற்று சிதம்பரக்ஷேத்திரத்திற்கு வந்து ஊர்வெளிவலம் வந்திருந்தனர்.

இதற்கு முன்னிரவில் தில்லைமூவாயிரவர்களுக்கும் பொன்னம்பலவாணர் கனவிற்றோன்றி "தில்லைவாழந்தணர்காள்! நீசர்குலதிலகனும் நமது பரமபக்தனுமாகிய நந்தனரென்பவர் நாளை ஊர்வலம்வருவார் நீங்களெல்லீருஞ் சென்றழைத்துவந்து குண்டத்தில் தீவளர்த்து அதில் ஸ்நானம்செய்வித்து நமது சந்நிதிமுன் கொணர்க" வென்றருளினர். இவ்வண்ணமே நந்தனருக்கும் சொற்பனஞ்சாதித்து மறைந்தனர். தில்லை வாழந்தணர்களியாவரும் பரமன்றிருவார்த்தைக் கதிசயித்து எதிர்பார்த்திருக்குமளவில் நந்தனரும் கடவுள் திருநாமங்களைச்சொல்லி கீர்த்தனஞ்செய்துக் கொண்டானந்தபரிதராய் வந்துகொண்டிருந்தனர். அவரை மறையோர் எதிர்கொண்டழைத்துவந்து அக்கினிகுண்டத்தில் மூழ்கச்செய்தனர். அவ்வெரியினின்றும் வேதபிராமண முனிவடிவமாய்த் தூயதேகம் பெற்றெழுந்த நந்தனரை நடராஜர் சந்நதி முன்கொணர்ந்தனர். அவர் அகண்டஜோதிமயமாய் பிரகாசித்து தில்லைப் பெருவெளிக்குள் வெளியாய்க்கலந்து மறைந்தனர். இவ்வற்புதத்தைக்கண்ட யாவரும் கண்கூசி ஆனந்தபரவசராய் நந்தனருடைய பக்திக்கும், மகிமைக்கும், புகழ்ந்தும், தோத்தரித்தும் மங்களவாழ்த்துக் கூறினர்கள்.

இங்கிவ்வாறு அழியாத்தூயதேகம்பெற்று அகண்டஜோதிமயமாய்ப்பிரகாசித்த நந்தனருடைய ஜோதிசொரூபமானது கைலாயகிரியின்கண் தேவர்களும் முனிவர்களும், பக்தசேவடிகளும், பதினெண்கணங்களும் சூழ்ந்துவணங்கப்பெற்று கொலுவீற்றிருக்கும், சிருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபவம், அனுக்கிரகம், முதலாகிய பஞ்சக் கிருத்தியங்களையுமுடைய சர்வஜீவ தயாபரரான கௌரிமனோகரனுடைய அஞ்சித ரஞ்சித, குஞ்சித, பாதபங்கயத்தில் வந்துகலந்தது. இவ்வுண்மையறிந்தவரும் ஆதியில் சப்தசாகரங்களையும் பானம்செய்து பூதபௌஷியவர்த்தமான மென்னும் திரிகால ஞானியருமான உபமன்னியமகரிஷியானவர் எழுந்து சிரசின்மேற் கைகுவித்து தோத்தரித்து இவரின் குணனுபவங்களைப் புகழ்ந்து நிற்குமளவில் மற்றேனையர்களும் எழுந்து அதிசயமுற்று பன்முறை துதித்து இவ்வியப்பைத் தெரிந்துகொள்ள விரும்ப, அம்மகரிஷியானவர் இத் திருநாளைப்போவாரென்னுமவர் சரித்திரத்தை ஆதியோடந்தமாய் திருவாய்மலர்ந்தருளினர்.

இதுவுமல்லாமல் பரமசிவ பக்தனிருக்கும் சேரியே கைலாயமென்றும், சிவபெருமானுக்கு பக்திபண்ணியவர் பறையாயிருப்பினும் பதினன்குலகத்தையும் பரிசுத்த மாக்குவாரென்றும், ஜெகநாதனைப் பணிவதோடும், பக்திவைராக்ய சித்திபெற்ற பக்தகோடிகளின் சரித்திரத்தைகேட்பதே முத்தியைப்பெறும் உபாயங்களில் மேலானதென்றும் திருவாய்மலர்ந்தருளினர். அதை அங்குள்ள யாவரும் பக்திசிரத்தையாய்க் கேட்டுக்களிப்புற்றனர். எனெனில் "திருநாளைப்போவாரென்னும் சரித்திரம் தேனினும், பாலினும் இனியது கண்டீர்." என்று நந்தனர்சரித்திர மகிமையைக்குறித்து கீர்த்தனம் செய்தவர்களும் சொல்லியிருக்கின்றனர். ஆகையால் நால்வகைப் பிறப்பு எழுவகைத்தோற்றம் யானை

முதலெறும் பீறாகவுள்ள எண்பத்துநான்கு லக்ஷ ஜீவபேதங்களில் மானிடஜென்மமே முதன்மையென்றும், கடவுள் தம்மை வணங்குவதற்கே நம்மைப் படைத்தாரென்றும் தெரிய வருகிறது.

நாம் யாவரும் "அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்" என்னும் செய்யுட்கு விரோதமன்னியில் நடந்தும் ஆலயங்களிற்சென்று கடவுள் பாதங்களைத் தலையால் வணங்கியும் கண்ணாற்கண்டும் அவர் நாமங்களையே செவியாற்கேட்டும், வாயால் வாழ்த்தியும் மனதால் சிந்தித்தும் விடாது முயல்வதோடும் நம்மாணுக்கர்களுக்கும் கல்விப்பயிற்சியோடும் இளமையிலேயே தெய்வபக்திவருவதற்கு ஆலயத்திற்சென்று கடவுளைவணங்கும்படி வற்புறுத்தல்வேண்டும். ஏனென்றால் தொட்டிற்பழக்கம் சுடுகாடுவரைத் தொடருமானதால் துவக்கத்திலேயே நற்பழக்கங்களில் கொண்டுவர வேண்டியதவசியம். நாம் ஒவ்வொருவரும் கடவுளுக்குப்பயந்து வீணபராதியாகாவண்ணம் நின்மலனை வணங்குவதும் அவர் நாமங்களை வாழ்த்துவதும் தியானிப்பதும் முடிவில் நிஷ்டையாம். அவ்வாறு பிறரையும் வணங்கவும் வாழ்த்தவும் தியானிக்கவும் செய்வது பொதுக் கடமையாயும் நாம் மானிட ஜன்மமெடுத்து உபாத்தியாயராயிருப்பதற்கு இன்றியமையாத எளிதிலடையும் பிரயோஜனமாயு மிருக்கின்றது.

வேதமும்விண்ணோர்வாழி வேதியர்விஞ்சைவாழி
கோதிலாத்தவத்தோர்வாழி குருமார்கள்சங்கம்வாழி
போதமெய்யடியார்வாழி புலவர்சங்கீதம்வாழி
ஆதிநாயகன்றருள்வாழி ஆலயம்நீடுவாழி.

## SHORT STORY: SANGAMPUTHAI ANDI.

### சிறுகதை : சங்கம் புதையாண்டி.

பெருமாள் சன்னதித்தெருவின் கடைசி வீட்டின் திண்ணையில் கௌரீசங்கம், ஏகமுகம் முதலிய ருத்ராக்ஷங்களுக்கு பொன்கட்டுகளிட்ட மாலை கண்டத்தில் பிரகாசிக்கவும், விபூதி திரிபுண்டரமாக அங்கமெங்கும் விளங்கவும், தாம்பிரத்தகடுபோல் துலாம்பிரமாய்க் காணப்பட்ட பஞ்சகச்ச சோமன் இடையில் விளங்கவும், கையில் தேவநாகர அக்ஷரங்களால் எழுதப்பட்ட சில ஏடுகளைத் தாங்கி சாய்வு திண்ணையில் சாய்ந்து பழுத்த பழம் போல் ஒரு விருத்தாப்பியர் அமர்ந்திருந்தனர். இவருக்கு முன்னால் தெருவில் கொட்டியிருக்கப்பட்ட ஈரமணலில் கோயில்கட்டி விளையாடிக்கொண்டு, அதிக ரூபலாவண்ணியமுள்ள ஒரு சிறுபெண் தென்பட்டனள். இவளுக்கு வயது சுமார் 6 இருக்கலாம். இப்பெண்ணின் கழுத்தில் காத்திரமாய் விளங்கப்பட்ட ஜோடி திருமங்கல்யமணிகளைக் கோர்க்கப்பட்ட மஞ்சள் நூலிழையையும், இடமூக்குக் குத்தி நூதனமாய்க் கறுப்புநூலிட்டிருப்பதையும் நோக்கும்பொழுது, விவாகமாய் வெகு நாளாகாத பெண்போல் காணப்பட்டனள்.

திண்ணையில் உட்கார்ந்துக்கொண்டு கண்ணுக்கு மூக்குக்கண்ணாடிகளிட்டு படித்துக்கொண்டிருந்த விருத்தாப்பியர், அடிக்கடி தன் மூக்குக் கண்ணாடியைக் கையிலெடுத்துக்கொண்டும், கண்ணிலணிந்துகொண்டே தலையைக்குனிந்து குனிந்து இச்சிறுபெண்ணை நோக்கியும், அடி குட்டி மணலை இறையாதே உள்ளேபோடி, சங்கம்புதையாண்டி கண்டால் பிடித்துக்கொண்டுபோய்விடுவான் என்று பயமுறுத்தினர். பெண்ணோ இலக்ஷியஞ்செய்யாமல் விளையாடிக்கொண்டே இருந்தனள். சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு ஸ்திரீ வீட்டுக்குள்ளிருந்து வெளியேவந்து விளையாடிக்கொண்டிருந்த பெண்தலையில் நறுக் நறுக்

கென்று நான்கு குட்டுகள் குட்டி, கன்னத்திலும், முதுகிலும் அறைந்து மென்னியைப்பிடித்துத் தள்ளிக்கொண்டு வீட்டுக்குள்ளேபோய், ஒரு மூலையில் தள்ளி காலாலும் கையாலும் வேண்டியமட்டும் புடைத்தாள். "ஐயோ, அப்பா! ஐயோ, அப்பா! இனிமேல் இல்லை"! என்ற சப்தமும் அழுகையும் மாத்திரம் கேட்டது. தெருத்திண்ணையி லுட்கார்ந்திருந்த கிழவர் கிடக்கட்டும்விடு, கிடக்கட்டும் விடு என்று சொல்லிக்கொண்டிருந்தாரே யன்றி இருந்த இடைத்தைவிட்டு எழுந்துபோய்த் தடுக்கத் துணியவில்லை. இந்த நடவடிக்கைகளைக் கண்ணுற்று பரிதாபமடைந்த பீமன் அவ்வக்கிராரத்திற்கு நூதனமானதால், இவர்களை இன்னாரென்றும் இப்பேர்க்கொத்தவர்களென்று மறியாதிருந்தபோதிலும், அவ்விருத்தாப்பியரை மாமாவென்றழைத்து தாங்களாவது விலக்கலாகாதாவென்று கேட்டான். யாரப்பா நீ புதிதாயிருக்கிறது? கிட்டுமைத்துனன்தானே! உட்காரு. நம்ம ஆத்துக்காரி என்ன சாமானியமானவளா? (நடையைத்திரும்பிப் பார்த்துக்கொண்டு மெதுவான தொனியுடன்) நான் விலக்கப்போனால் எனக்கும் இரண்டுவிழும். அந்தப்பெண்ணோ தாய்வீட்டுக்கு ஒரே பெண். தாய் தகப்பன்மார்கள் 15-வருஷம் சந்ததி இல்லாதிருந்து, பெண்ணைப்பெற்று, வெகு அருமையாகவும் செல்வமாகவும் வளர்த்தினார்கள். அப்பெண் மூலமாய் நமது சீமந்தபுத்திரன் நீலகண்டனுக்கும் கொஞ்சம் சொத்து சேருமென்ற எண்ணத்துடன் பெண் சிறியதாயிருந்தாலும் பாதகமில்லையென்று, சென்ற சித்திரை மாதத்தில் விவாகஞ் செய்துமுடித்தேன். பெண்ணின் தாய்தகப்பன்மார்கள் இருப்பது ஒரு காததூரத்திலுள்ள சேந்தமங்கலம் என்ற ஊராதலால் பெண்ணைப் பார்க்க வேணுமென்று அடிக்கடி வந்து 2, 3 நாள்களிருந்துவிட்டுப்போகிறார்கள். பெண் ருதுவாகிறவரையில் தங்களிடமிருக்கட்டுமென்று பலதடவைகளில் நல்ல வார்த்தைகள்சொல்லிக் கேட்டும், அதிசயமாய் நாட்டுப்பெண்ணையடைந்த இந்த நீலி அனுப்பமாட்டேனென்று சொல்லிவிட்டாள். அவர்களோ சொல்ல முடியாத மனஸ்தாபத்துடன் கோபித்துக்கொண்டு போய்விட்டார்கள்.

இவள் பெண்ணையாவது பிரியமாகவைத்துக் கொண்டிருக்கிறாளோ வென்றால் அதுவுமில்லை. நின்றால் குற்றம், எழுந்தால் குற்றம். என்ன செய்யு மிளங்குழந்தை! இன்னம் 6-வயது நிறம்பவில்லை.

இவள் இப்படி அக்குழந்தையை அடிக்கிறதைக் கண்டால், நீலகண்டன் கண்ணுங்கண்ணீருமாய் வெளியே போய்விடுகிறான். அவனுக்கு இன்னம் 12-வயதாகவில்லை. ஆசைக்காக 11-வயதிற்கே 5-வயதுப் பெண்ணை விவாகஞ்செய்வித்தேன். அந்தப் பெண்ணுக்கு புத்திவரும்படியாக பலநாள் பட்டினியும் போட்டாள், இரண்டுநாள் சூடும் போட்டாள், காலுக்கு முட்டியும் போட்டாள்; கம்பத்தில் கட்டி யடித்தும்பார்த்தாள்; உபயோகமில்லை. அப்பெண்ணுங் காரியஞ் செய்கிறதில்லையென்று சொல்லக்கூடவில்லை. தினப்படி எட்டு மாட்டுச்சாணியை ஏகமாய் வாரியெடுத்து முட்டை தட்டுகிறாள். தயிர் கடைந்து வெண்ணெய் எடுக்கிறாள். அரைமைல் தூரத்திலிருந்து பத்துக்குடம் தண்ணீர் கொண்டுவருகிறாள். வீடுவாசல் பெருக்கி மெழுகிக் கோலம் போடுகிறாள். இவைகளைவிட இன்ன மதிகமான வேலைசெய்ய அவளுக்கு என்ன வயதாய்விட்டது. எல்லாந் தலைவிதியென்று முகுந்தபண்டிதர் சொல்லி முடித்தார்.

பண்டிதரே! "விவாகேவித்திய நாசாய,
"சர்வஞ்ஞசாய சோபனம்"

"என்பதை யறியமாட்டீரோ! ஒரு பெண்ணை விவாகஞ்செய்துகொள்வது இன்னத்திற்கென்பதை யறிய வயதுவராத சிறு பிள்ளைகளுக்கும், புருஷனால் தனக்கு உண்டாகிறஇன்பமின்னதென்று அறியத்தகுந்த வயதாகாத பெண்குழந்தைகளுக்கும் விவாகஞ்செய்வதா

லென்ன உபயோகம்? இதையறியாது நடத்துவதாலன்றோ, நமது தேசத்தில் விதவைகள் விசேஷமாய் அதிகரித்தது. தங்கள் குமாரன் சிரஞ்சீவியாக இருக்கட்டும். "அநித்தியானி சரீராணி" என்று தங்களைப் போன்ற பெரியோர்கள் சொல்லுகிறபடி நீலகண்டன் இப்பொழுது காலகதியடைந்துவிட்டால், இன்னும் 6-வயதாகாத கைம்பெண்ணின்கதி என்ன? வைத்தியன் வீட்டில் வியாதியும், ஜோசியன் வீட்டில் விதவையும் அதிகமென்ற பழமொழியை நீரறியாதவரன்றே! சாராயக்குடி கெடுதலென்று தெரிந்தும், குடிக்கிறவனை மூடனென்று சொல்ல நீர் கூசுவீரோ? நீலகண்டனுக்கு சொத்து சேருமென்று விவாகஞ் செய்துவிட்டேனென்று சொன்னீரே? நான் சொன்னபடி நடந்தால் என்ன சொத்து சேரும்? நீர் சொன்னபடி நடந்துபோன விவாகத்தை தலைவிதிப் பிரகாரம் முடிந்ததென்று வைத்துக்கொள்வோம்! உமது சம்சாரம் அந்த சிறுபெண்ணை வைபலாம், திட்டலாம், தீராச் பக்ஷம் அடித்தாலுந்தகும். சூடு போட்டாளென்றும், கம்பத்தில் கட்டியடித்தாளென்றும், நீரே வாய்கூசாமல் சொல்லுகிறீரே! இவைகள் 'கிரிமினல்' குற்றமாகுமென்பதை யறியீரோ! என்னிடஞ் சொன்னதுபோல் வேறிடத்தில் சொல்லவேண்டாம். யானை தன்தலையில் தானே மண்ணைப் போட்டுக்கொள்வதுபோல், உமது சம்சாரத்திற்கு நீரே முதல் சாக்ஷியாகி, ஜெயிலுக்கு அனுப்புவீர்போல் தோற்றுகிறதே! உமது சம்சாரம் செய்கிறது தப்பிதமென்று உமக்குத்தெரிந்தும் அவளையடக்க சக்தியற்றவராய், பயந்து, திரும்பித் திரும்பிப்பார்த்துக் கொண்டு சொல்லுகிறீரே! இதுவா புருஷத்தனம்! உமக்குப் பிறர் மரியாதை செய்யவேண்டுமென்று நீர் நினைத்தால், நீர் அவர்களை மரியாதையாய் நடத்தினாலன்றோ, உமக்கு மரியாதைகிடைக்கும். உமது மருமகளையும் சம்சாரத்தையும் நீரே 'அடி, அடி' என்றும், 'போடி, வாடி' என்றுமழைத்தால், உம்மையவர்கள் எப்படி மரியாதைசெய்வார்கள்? வாங்கோ, போங்கோ என்று அழையாத போதிலும், பூர்த்தியான பெயரைச்சொல்லி யழையுமே! "வாசமனையாளைப் பஞ்சணையில்" என்றபடி சயனக்கிரகத்தில் உமது சம்சாரத்தை அடி, பிடி என்று சொல்வதை யார்தடுக்கவல்லவர்! நீர் சொல்லுகிறபடி நானும் உமது சம்சாரத்தையாவது, நாட்டுப் பெண்ணையாவது, 'அடி' யென்று கூப்பிட்டால் உமக்குச் சம்மதமாகுமா? அல்லது அவர்கள்தான் சும்மா இருப்பார்களா?

"ஒருநாள் எமக்கு கோயமுத்தூரில் இஷ்டரான ஒரு பிராமணவக்கீல் வீட்டிற்குப் போயிருந்தோம் அவர் உட்கார்ந்திருந்த மண்டபமானது, மேஜை, நாற்காலி, அலமாரி முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டு வெகு அழகாகவும், சுத்தமாகவுமிருந்தது. வேளாளர்களான சில கக்ஷிக்காரர்களுமிருந்தார்கள். வக்கீலானவர் தனது ஆசனத்திலிருந்து கொண்டே இரண்டு, மூன்று தடவை வாயிலிருந்த எச்சிலை சமீபத்தில் துப்பிக்கொண்டார். இவர் இது எதற்காகக் கைகொண்ட கோட்பாடோ அறியோம். இவற்றைக் கண்ட கக்ஷிக்காரரில் தாம்பூலமும், புகையிலையும் வாயில்போட்டு மென்றுக்கொண்டிருந்த ஒருவன் தான் உட்கார்ந்திருந்த பெஞ்சியினடியில் 'புரிச்' என்று துப்பினான். அது இரத்த வர்ணமாய் ஏறக்குறைய ஒரு சதுர அடியகலம் பரவிற்று. வக்கில் கோபங்கொண்டு மூர்க்கமாய் 'என்னவோய் இங்கேயே இப்படித்துப்பினீர்?' என்று அதட்டிக்கேட்க கக்ஷிக்காரன் வெகுபயந்து, 'சாமிகளே மன்னிக்கவேணும், தாங்களும் வெற்றிலை போட்டுக்கொண்டுதுப்பினால் இப்படித்தானிருக்கும்' என்றனன். வக்கில் தகுந்த மறுமொழி சொல்ல சக்தியற்றவராய் மௌனம் சாதித்து, அந்நாள் முதல் தம் குற்றத்தையறிந்துகொண்டு நடந்தனர்.

"அப்படியே நீரும் உமது குற்றத்தை நீக்கி பிறருக்காகவாவது நல்லமரியாதையானவழி

யில் நடந்து காட்டுமே! அப்பெண்ணை சங்கம் புதையாண்டியிடத்தில் பிடித்துக்கொடுக்கிறேனென்று பயமுறுத்துகிறீரே! அதுயார்?" என்றுகேட்க.

பண்டிதர், சும்மா விளையாட்டாக இவ்வூரில் சொல்வது வழக்கந்தானென்று மறுமொழி புகன்றார்.

"விளையாட்டுக்காக இல்லாததை யுண்டுபண்ணி இச்சிறு வயதிலேயே பயத்தையும், திகிலையும் குழந்தைகளுக்கு ஏன் உண்டுபண்ணுகிறீர்? இக்காலத்தில் பெண்களைப் பேப்பிடித்துக்கொண்டதென்று சொல்வதெல்லாம் இக்கெட்டவழக்கத்தால் வருகிறதன்றோ? நமது குழந்தைகளைப் பேடிகளாக்குவதற்கு இதைவிட வேறு வேண்டுமோ?" என்று சொல்லிவிட்டு எழுந்துவிட்டான் பீமன்.

பிறகு நாட்டுப்பெண் வேதம்மாளை மாமியார் வருத்தும்மாதிரியைக் கொஞ்சமும் சம்மதியாத முகுந்தபண்டிதர், 'ஏன் நமது குமாரனுக்கு இச்சிறு வயதில் விவாகஞ்செய்தோம்! வயது வந்தபிறகு செய்திருந்தால், தாயார் தன் பெண்சாதியைச்செய்கிற கஷ்டங்களைப் பொறுக்கமாட்டானன்றோ?' என்றெண்ணி, தாம் செய்தது அவிவேகமென்றறிந்து உள்ளமுருகுவர். இவர் தன் சம்சாரத்தை இவ்விஷயத்தில் அதட்டியடக்கி, மருமகளை ஆதரணை செய்யத்தகுந்த துணிகரமில்லாதவரானபோதிலும், சும்மாவிருக்க முடியவில்லை. அப்பெண்ணையவள் நடத்துகிற விஷயத்தில், தானுமனுசரணையுள்ளவராக நடித்து, தன் மனைவியை சந்தோஷப்படுத்தவேண்டியிருந்தது. இதற்காக அடிக்கடி அப்பெண்ணை தன் சம்சாரம் கண்டிக்கும்பொழுதெல்லாம் தானும் 'சங்கம் புதையாண்டியிடம் பிடித்துக்கொடுத்துவிடு' என்று பயமுறுத்துவார்.

சாதாரணமாய் ஒவ்வொரு ஊரிலும் பல வீடுகளில் குழந்தைகள் ஏதாவது விஷமங்கள் செய்தால், பெரியவர்கள் அக்குழந்தைகளுக்கு ஒரு பயத்தை யுண்டுபண்ணவேண்டுமென்ற கருத்துள்ளவர்களாய் 'பூச்சாண்டி வருகிறான்!' 'ஜெஸீத்தாராம் வந்துவிட்டான்', என்று சொல்லி பயமுறுத்திவைப்பது சகஜம் தானே! கோயமுத்தூரில் 'ஜெஸீத்தாராம்' என்ற ஒரு பிச்சைக்கார பைராகியுண்டு. இவன் வந்துவிட்டானென்று சொன்னாற் போதும், சிறு பிள்ளைகள் நமனைக்கண்டவுயிர்போல் தியங்குவார்கள்.

இவ்விதம் இந்நாமகிரிப்பேட்டையில் சங்கம் புதையாண்டி யென்று ஒருவனுண்டென்றும், அவன் ஒரு சங்கம்புதரில் வசிக்கப்பட்ட மந்திரவாதி என்பதாகவும், விகார ரூபத்துடனிருப்பதாகவும் சொல்லக்கேள்வியன்றி நேரில் அறிந்தவர் சொற்பமாயினும், ஊரில் இவன் பெயரைச்சொல்லி, சிறு பிள்ளைகளை பயப்படுத்தாதவரில்லை. இவன் பெயரைச் சொன்னவுடன் சிறுபிள்ளைகளுக்கு உயிர் போய்வரும். பிள்ளைகளை பயங்காளிகளாக்குவதற்கு இதைவிட வேறு மருந்தும் வேண்டுமோ! ஒருநாள் நமது வேதம் தெருவில் விளையாடிக்கொண்டிருக்கவும் முகுந்தபண்டிதர் திண்ணையிலுட்கார்ந்து 'அடிபெண்ணே சங்கம் புதையாண்டியண்டை 'பிடித்துக்கொடுத்துவிடுவேன் ஓடிப்போடி" யென்று சொல்லவும், அதேசமயத்தில் சங்கம் புதையாண்டி உருமாறித் தெருவில் போகவும், ஏது இக்கிழவர், இச்சிறு பெண்ணை நமக்குக் கொடுக்க பிரியமுள்ளவராகவிருக்கிறார் என்று பலவாறு எண்ணி, நாமாக இவரைக்கேட்டால் கொடுப்பாரோ, அல்லது மறுப்பாரோ, எப்படியானுலுமாகட்டுமென்று சற்று மறைந்திருந்து, இவர் ஏதோ காரியமாக வீட்டிற்குட்செல்லவும், பெண்ணின் பக்கத்தில்வந்து அம்மணி உன்தாயார் உன்னை ஒருவருக்குந் தெரியாமல் எடுத்துக்கொண்டு வரச்சொன்னாளென்பதாகச் சொல்லி, சில பக்ஷணங்களைக்கையில் கொடுத்து முச்சந்திவேளையில் பெண்ணைத் தூக்கித் தோளில்வைத்துக்கொண்டு நடந்துவிட்டான் சவாரி.

வேக்வேகென்று வழிநடந்து ஆறுமைல் தூரத்திலுள்ள தன் சங்கம்புதரில் நுழைந்தான். அங்கு ஒரு திவ்வியமான சிறிய அரண்மனையொன்று காணப்பட்டது. அதைச்சுற்றி பலவித அபூர்வமான புஷ்பச்செடிகள் வைத்து வெகு மனோகரமாயிருந்தது. அரண்மனை தலைவாசலண்டை விதம் விதமான பச்சைக்கிளி, பஞ்சவர்ணக்கிளி, மைனா, காடை, கௌதாரி முதலிய பக்ஷிஜாதிகள் அததற்குத் தக்கினவிதமான கூண்டுகளிலடைக்கப்பட்டு சிங்காரமாகக் கத்திக்கொண்டிருந்தன. ஒரு புறத்தில் புள்ளிமானும் மற்றொருபுறத்தில் ஒரு கருங்குரங்கும், அடுத்த பின்புறத்தில் இரண்டு அழகான கறவைப்பசுக்களும் கட்டப்பட்டிருந்தன. இந்த வீட்டுக்கு வேலியிட்டதுபோல் நாலுபுறமும் சங்கம்புதர் படர்ந்திருந்தது. வீட்டின் முன் அறையில் சில நாற்காலிகளமைக்கப்பட்டும், சுவரில் வெகுநேர்த்தியான கண்ணாடிப்படங்கள் தூக்கப்பட்டும், அலமாரிகளில் அநேக விநோதப்பொருள்கள் வைக்கப்பட்டுமிருந்தது. அடுத்த அறையில் சில போஜன பாத்திரங்கள் வைக்கப்பட்டிருந்தன. இதற்கு இரண்டு புறத்திலும் இரண்டு அறைகள் காணப்பட்டன. அதில்ஒன்றில் எல்லாபோஜன பதார்த்தங்களும் பாத்திரங்களில் நிரப்பிவைக்கப்பட்டிருந்தது. மற்றொன்றில் படுக்கைசாமான்கள் கட்டிலின்பேரில் போடப்பட்டும், சுவரில் இரண்டு நிலைக்கண்ணாடிகளும், பல விசித்திரமான படங்களும் மாட்டப்பட்டிருந்தது. சமையலறையும் ஸ்நானவறையும் பின்புறத்தில் கட்டப்பட்டிருந்தன. சங்கம்புதராகிய வேலிக்கடுத்தோடிக்கொண்டிருந்த காற்றிலிருந்து, கால்வாய் வெட்டி ஜலம் கொண்டுவரப்பட்டிருந்தது. சுருங்கச்சொல்லுங்கால் ஆண்டிவீடு போலன்றி அரசன் மாளிகை போற்றோன்றிற்று. எக்காரணத்தினாலாவது ஜலம் வருவதற்குத்தடைபட்டால், நமது வேதாம்பாள் தானாகவே கால்வாயைப்பற்றிப் போய் தண்ணீரைத் திருப்பிக்கொண்டுவருவாள். என் தாயாரிடத்தில் அழைத்துக் கொண்டுபோய் விடுவதாகச்சொன்னாயே, அவர்களெங்கே என்று வேதம் கேட்டபொழுதெல்லாம், சங்கம்புதையாண்டி, அவர்கள் சீக்கிரத்தில் வருவார்கள் என்று சொல்லுவான். தவிர, இவன் தான் சங்கம்புதையாண்டி என்பதையும் வேதமறியாமற் காலங்கழித்தாள்.

இவ்விடத்தில் இவள் ஏழுவருஷகாலம், விசனமென்பதையறியாதவளாய் வளர்ந்தனள். இவளுக்கு வேலைசெய்ய நான்கு சிறு பிள்ளைகளுமிருந்தார்கள். சங்கம்புதையாண்டி காலையில் சமையல் செய்து இப்பெண்ணுக்கும் மற்றப்பிள்ளைகளுக்கு மிட்டு தானுமுண்டு 10-மணிக்கு வெளியேபோய் சாயந்திரம் 6-மணிக்கு வீடுவருவான். வேதத்திற்கு தினந்தப்பாமல் வேண்டிய கனிவர்க்கங்களும், தின்பண்டங்களும், விதம் விதமாய்க்கொண்டு வந்து கொடுப்பான். புருடன் வீட்டில் பட்ட கஷ்டங்களை நினைத்து விசனப்பட்டாளேயன்றி, தன்னைத் தனியாகக் கொண்டுவந்து வைத்திருப்பதற்காக விசனப்பட்டவளல்ல. அதிக ஆதரவாய் யாதொரு குறைவுமின்றி வளர்க்கப்பட்டு வந்தபடியால், சுபலக்ஷணங்களமைந்து வெகு அழகமைந்த கன்னிகையானாள். சங்கம்புதையாண்டி கல்விசற்றவனும், வைத்தியத்திலும், மாந்ரீகத்திலும் பூர்ண பாண்டித்திய மூள்ளவனுமாதலால், அவனிடத்தில் பழகிய வேதமும்

"தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினுமவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவரெனுமிது வழக்கே
உருண்டவாய்தோறும் பொன்னுருளுரைத்துரைத்
இருண்டகல்லையுந் தன்னிறமாக்கின விரதம்." [தோடி

என்றபடி படிப்பு, வைத்தியம், மாந்திரீகம் முதலியவைகளில் வெகு சீக்கிரத்தில் தேறினள். இவளை சங்கம்புதையாண்டி எடுத்துக்கொண்டு போனது, இவளைவளர்த்தி, தான் பெண்டுசெய்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடனன்று. ஆனால், தன் வீட்டுக்கு ஒரு பெண்ணிருப்பது அழகென்று நினைத்தே,

இவன் நம்வேதத்தினிடத்தில் வித்தியாசமான எண்ணமின்றி தன் சொந்தக்குமாரத்தியைப் போல் பாவித்துவந்தான். அப்படி அவனிருந்தது பதிவிரதாசிரோன்மணியாகிய வேதத்தினுடைய அதிர்ஷ்டமே. அவளுமவனைத் தகப்பன்போலவே பாவித்து வந்தனள்.

இது இங்ஙனமிருக்க, இவளைப்புருஷன் வீட்டார் பலவிடங்களிற்றேடியுங் காணுமல், தாய் வீட்டிலும் விசாரித்து, அங்குமில்லாததால் கொஞ்சகாலம் அதே வியாகூலமாயிருந்து, தாய் வீட்டார்மேல் சந்தேகங்கொண்டு, நீங்களே எங்கள் மருமகளை ஒளித்துக்கொண்டு இப்படிச் சொல்லுகிறீர்களென்று சொன்னுர்கள். தாய் வீட்டார் புருஷன்வீட்டார்மேல் சந்தேகங்கொண்டு, நீங்களே எங்கள் பெண்ணைக்கொன்றுவிட்டு, எங்கள்மேல் பழி சுமத்துகிறீர்களென்று சொன்னுர்கள். வரவர இவர்களுக்குள் பகை முற்றி, விரோதமதிகரித்து ஒருவருக்கொருவர் முகதரிசனத்தையுமிழந்தார்கள். வேதத்தின் தாய் ஞானம்பாளும், தந்தை சுந்தரபண்டிதரும் மகாபுண்ணிய சீலர்கள். ஞானத்தைக்கண்டவர் கேட்டவர்களெல்லாம், இந்த உத்தமி கல்வியிற் கலைமாதோ! கற்பில் அருந்ததியோ! கருணையிற் பார்வதியோ! பொறுமையிற் பூதேவியோ! பரிசுத்தத்தில் பவானியோ! என்று அதிசயிக்கும்படியான குணமுள்ளவள். இவளை ஒருநாள் "நீ ஏன் சோமவார விரதமனுஷ்டிக்கிருய்? புருஷனுடைய பணிவிடையைவிட வேறு விரதம் கற்பிற் சிறந்த ஸ்திரீகளுக்குண்டோ" வென்று கணவர் கேட்க, "ஸ்வாமி,—அடியேன் ஒரு சந்ததியை விரும்பினேனே யன்றி வேறென்றுமல்ல" வென்று வினயமாய் ஞானம் பகர, "ஹே! பைத்தியகாரி, இவ்வளவு நாள் எவ்வளவோ கஷ்டப்பட்டு விரதமிருந்து, கடைசியில் இந்த அற்பத்திற்காகவோ ஆசைப்பட்டாய், வீணே தேடிக்கொண்டாய், சர்வசிரேஷ்டமான மோக்ஷத்தைக் கருதலாகாதா!" என்று கண்டித்தவரென்றால், இவருடைய தன்மையை இன்னும் வர்ணிக்கவும் வேண்டுமோ? இவ்வளவு ஞானமும் புத்தியுமிருந்தும் தாய்மட்டும் பெண்ணை மறந்தவளன்று.

பிறகு இவர்கள் ஒரே மனதாய் உலகவாசையைத்துறந்து கையிலுள்ளதையெல்லாந் தானதர்மஞ்செய்து, பரதேசிகள் வேஷம்பூண்டு ஸ்தலயாத்திரைசெய்து பலவிடங்களைத் தரிசித்துக்கொண்டு, இராமர் வானரசேனையைச் சேர்த்த விடமாகிய கொல்லிமலை யடிவாரம் சேர்ந்தார்கள். ஒரு விசேஷதினத்தில் இவர்கள் தங்கள் வழக்கப்படி அதிகாலையில் பிராதஸ்நானஞ்செய்ய வேண்டி ஓர் நதியை நாடிச்சென்று, மூழ்கி ஸ்நானஞ்செய்ய ஜலமேராளமா யில்லாததால், பிரிந்துபோகிற கால்வாயை யடைத்துப் பள்ளமுண்டாக்கி, நீர்தேக்கி ஸ்நான ஜப தபங்களைச்செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது ஸ்ரீ தேவியைப்போல் அதிக ரூபலாவண்யமான ஒரு யவ்வனஸ்திரீ இவர்கள் முன் தோன்றி பயந்தவள்போல் நின்றனள். தண்ணீரில் நிற்கும்பொழுதும், ஈரவஸ்திரந்தரித்துக் கொண்டிருக்கும் பொழுதும், மனிதர்களுக்குள் பக்தி, ஞானம், உதிப்பது இயல்பாதலால், புருஷர் தன் முன்தோன்றின ஸ்திரீயை ஜெகதம்பிகை யென்று தீர்மானித்து அவள் காலில் விழுந்து பாதத்தை உறுதியாய்ப் பிடித்துக் கொண்டார். ஞானம்பாளோ தன் பெண் என்று கருதி வேதம் என்று கூவி அழைத்துக் கொண்டுபோய்த் தழுவிக்கொண்டனள்.

"மனம்போல் மாங்கல்லிய" மென்றபடி சுந்தரபண்டிதருக்குத்தோன்றின ஸ்திரீ ஜெகதம்பிகையாகவும், ஞானம்பாளுக்குப் பெண்ணாகவும் எண்ணியபடியே யமைந்தனள். தோன்றியவள் பேதமை குணத்தால், இவர்களை சங்கம்புதையாண்டியுமவன் பெண்சாதியுமென்று உன்னி பயந்து நடுங்கி, தன் மாந்திரீக வல்லமையினால் உடனே மறைந்து நின்று, ஸ்திரீயினுடைய ரோதனத்தினால் இவர்கள் தன்னைப்பெற்று அன்பாய் வளர்த்த தாய் தகப்பனென்றறிந்து கிட்டநெருங்கி, தாயுடன் குலாவி தந்தையை அப்பா, அப்பாவென்று உபயோகமின்றி தட்டி எழுப்பினள்.

* * * *

உடனே ஆகாயத்தில் "நீங்கள் எனக்காக அழவேண்டியதில்லை, மதுரைசேர்ந்து மாந்திரீகம், வைத்தியம் முதலிய தொழிலால் காலந்தள்ளுங்கள், கடவுளருள்புரிவார்" என்ற சப்தம் கேட்டது. அதை சிரமேற்கொண்டு, அவ்விடம் விட்டகன்றனர்.

"இட்டமுடனென்றலையில் இன்னபடி என்றெழுதி
விட்டசிவனுஞ் செத்துவிட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்னாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ."

# "THE CHILDREN'S DAY" CELEBRATION OF THE VICEROY'S BIRTHDAY.



H. E. LORD HARDINGE WITH FAMILY.
லார்ட் ஹார்டிஞ்சு அவர்களும் அவருடைய குடும்பமும்.



The King-Emperor as Colonel-in-Chief of King George's Own Lancers (Indian Army.)
மாக்ஷிமைதங்கிய நமது சக்கிரவர்த்தி
(இந்திய ராணுவ உடையில்.)

SUPPLEMENT TO "THE CHILDREN'S DAY" FESTIVAL NUMBER.

# The Faith That Made a Nation Whole.

"I give you the message of Faith"—*H. E. Lord Hardinge.*




**INDIA'S ONE MESSAGE:**
**"PEACE AND GOOD WILL**
**BE UNTO THEE."**

**"India's Future":**
**'A Crown of Glory**
**to the British Nation"**
**and A Tower of Strength to the**
**Kingdom of God on Earth.**

**"DALAPANGALA":**
**"THE STRIVING STRUGGLING**
**MARCH OF CIVILISATION."**